

இந்தியப் புராதனக் கதைகள்

31



நவீன வேதாளக் கதை

19



மர்மக்குளம்

13



விநாயகர்

45

# பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# தேசத்தில் நலவாழ்வு

உலகில் பெரியம்மை என்ற வியாதி அழிக்கப்பட்டது என அறிவிக்கப்படவே, எங்கும் மகிழ்ச்சி பொங்கியது. இதுபோல இளம்பிள்ளை வாதத்தை ஒழிக்க முப்பது ஆண்டுகளுக்குமுன் முயற்சியைத் தொடங்கினார்கள். 2005க்குள் இதனை முற்றிலும் ஒழிக்கக் குறி வைத்துள்ளார்கள். இவை யாவும் மக்களின் நல வாழ்விற்காகப் பாடுபடுகிறார்கள் என்பதைக் காட்டுகிறது.

பல தெரிந்த நோய்களைக் குணப்படுத்த மருந்துகள் உள்ளன. இவற்றால் அந்நோய்கள் மீண்டும் வராமல் தடுக்க முடிகிறது. ஆனால் நமக்குத் தெரிந்திராத சில நோய்கள் அவ்வப்போது திடீரெனத் தலைதூக்குகின்றன. இவற்றை கண்டுபிடித்து ஒழிக்க உலக சுகாதார நிறுவனமும் மற்ற சுயேச்சை அமைப்புகளும் முனைந்து வருகின்றன.

இவ்வளவு இருந்தும் மக்கள் தம் கடமைகளை மறந்து தன்னிச்சையாகச் செயல்படுவது தான் மிகுந்த வருத்தத்தை அளிக்கிறது. தற்போதைய தலைமுறை இவ்விஷயத்தில் மிகவும் கவனம் செலுத்த வேண்டும். இவர்களது உடல்நலன் பாதுகாக்கப்பட்டாலே நாட்டில் முன்னேற்றம் காண முடியும். எனவே ஒவ்வொரு குடும்பத்திலும் பெற்றோர்கள் தம் குழந்தைகளின் உடல்நலனை நன்கு கவனித்து இதற்கான முயற்சிகள் செய்யும் அமைப்புகளுக்குத் தம் முழு ஒத்துழைப்பைத் தர வேண்டும். சற்றும் கவனக் குறைவாக இருந்து விடக்கூடாது.

ஆசிரியர் : **விஸ்வம்**





இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு
அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் – 20

இங்கு இலக்கியப் படைப்பாளர்கள் சிலர் பற்றிய வினாக்கள் உள்ளன. அவற்றின் விடைகளை அறிவீர்களா?

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

1. நான் பக்தி மார்க்கக் கவிஞன். என் பஜன்களும் தோஹாக்களும் புகழ் பெற்றவை. நான் சமூக, மத சீர்திருத்தவாதி. நான் யார்?

---------------------------------------------

2. நான் 1330 பாக்களைத் தமிழில் பல விஷயங்கள் பற்றி எழுதினேன். நான் யார்?

---------------------------------------------

3. நான் மராட்டியில் 5000க்கு மேல் அபங்களை பாண்டுரங்கப் பெருமானைப் புகழ்ந்து எழுதினேன். நான் யார்?



---------------------------------------------

4. என்னைக் கவிச்சக்கரவர்த்தி எனக் கூறுகிறார்கள். நான் ராமாயணத்தைத் தமிழில் 10000 செய்யுள்களில் எழுதினேன். நான் யார்?

---------------------------------------------

5. நான் சூர்சாகரை எழுதியவன். இவை பிரஜ்பாஷாவில் லட்சம் செய்யுள்களில் உள்ளவை. நான் யார்?

---------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியத் தலைவர் யார் என்றும் அதற்கான காரணங்கள்ள பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ....................................

....................................................

....................................................

போட்டியாளரின் பெயர்: ....................................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..................................................

....................................................

பின்கோடு: ........................ போன்: ..........................

போட்டியாளரின் கையொப்பம்: ...............................

பெற்றோரின் கையொப்பம்: ....................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 20**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜூன் 5, 2003

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# சிலையின் விலை

மன்னர் மாதவசேனர் கலாரசிகர். அவர் பல அழகிய ஓவியங்களையும் சிலைகளையும் சேகரித்து ஓர் அருங்காட்சியகத்தை அமைத்தார். அதை நன்கு கவனித்து நிர்வகிக்க கலையை மதித்து ரசிக்கக் கூடிய ஒருவனைத் தேர்ந்த எடுக்க விரும்பினார்.

அதனால் அருங்காட்சியகத்தின் நிர்வாகி என்ற பதவிக்கு தேர்வு ஒரு குறிப்பிட்ட நாளில் நடக்கும் என்று நாடெங்கிலும் பறைசாற்றுவிக்கப் பட்டது. அத்தேர்விற்குப் பல கலைஞர்கள் வந்தார்கள். அவர்களை வடிகட்டி மூன்று பேர்களை ஆஸ்தான பண்டிதர் தேர்ந்து எடுத்தார்.

மன்னரும் அந்த மூவரையும் கூட்டிக் கொண்டு அருங்காட்சியகத்திற்கு சென்றார். அங்கு ஓர் அழகிய சிலையை அவர்களுக்குக் காட்டி அவர் ''இந்த அழகிய சிலைக்கு எவ்வளவு பணம் கொடுத்து வாங்கி எடுத்துக் கொண்டு போவீர்கள்?'' என்று கேட்டார். சாகரன், ''இந்த அழகிய சிலைக்கு என் சொத்து முழுவதையும் விலையாகக் கொடுத்துவிட்டு இதை எடுத்துக் கொண்டு செல்வேன்,'' என்றான். சேகரனும், ''என்னிடம் உள்ளவற்றை எல்லாம் விற்று இதை வாங்கிக் கொண்டு போய்விடுவேன்,'' என்றான்.

சுதாகரனோ, ''அரசே! இதன் விலையை மதிப்பிடவே முடியாது. இந்த அழகிய கலை அம்சம் கொண்ட சிலையை எல்லோரும் பார்த்து ரசிக்க வேண்டும். இது இங்கேயே இருக்க வேண்டிய அற்புதப் படைப்பு. இதை விலை கொடுத்து வாங்கவும் மாட்டேன். விற்கக் கூடாது என்றும் கூறுவேன்,'' என்றான். மன்னர் சுதாகரனையே அருங்காட்சியக நிர்வாகியாக நியமித்தார்.



# தேடி வந்த செல்வம்

சூலூரில் சுப்பன் என்பவன் அந்த ஊரில் கிடைத்த எடுபிடி வேலைகளைச் செய்து பிழைத்து வந்தான். அவன் சிறு வயதிலேயே தன் தாய் தந்தையரை இழந்தவன். ஊரில் பலரது ஆடுமாடுகளை ஓட்டிச் சென்று மேயவிட்டுத் திரும்ப அவற்றை ஓட்டி வருவதும் அவன் செய்து வந்த வேலைகளில் ஒன்றாகும். இதனால் அவன் சாப்பாட்டிற்குத் திண்டாடாமல் காலம் கழித்து வரலானான்.

ஒருநாள் அவன் வழக்கம் போல ஆடுமாடுகளை ஓட்டிச் சென்று காட்டில் மேயவிட்டுவிட்டுத் தனக்குத் தெரிந்த பாட்டுக்களைப் பாடிக் கொண்டிருந்தான். அவன் இருந்த இடத்தில் ஒரு புளியமரம் இருந்தது. அதில் இரண்டு பிசாசுகள் இருந்தன. ஒன்று வயதான கிழப் பிசாசு, மற்றது இளம் பிசாசு. அவை உரத்த குரலில் பாடிக் கொண்டிருந்த சுப்பனைப் பார்த்தன.

அப்போது கிழப் பிசாசு இளம் பிசாசிடம், ''இந்த சுப்பனை நான் வெகுகாலமாக அறிவேன். இவன் அப்பாவி. கள்ளம் கபடு அறியதவன், அநாதை. அதனால் சூலூரில் உள்ளவர்கள் இவனிடம் நிறைய வேலை வாங்கிக் கொண்டு சாப்பாடு மட்டும் கொடுக்கிறார்கள். அதனால் நாம் இவனுக்குப் பணம் கொடுத்து உதவ வேண்டும்,'' என்றது.

இளம் பிசாசும், ''சரி, இப்படி ஒரு

- சிவனார் செல்வன் -



நற்செயலைச் செய்வோம்!'' எனவே, இரு பிசாசுகளும் மரத்திலிருந்து கீழே குதித்தன.

கிழப் பிசாசு இளம்பிசாசிடம், ''நான் செய்வதைப் பார்த்துக் கொண்டிரு. குறுக்கே பேசாதே!'' என்று கூறி ஒரு பணப்பையை எடுத்து சுப்பனின் முன்னால் எறிந்தது. ஆடிப்பாடிக் கொண்டிருந்த சுப்பன் தன் முன்னால் விழுந்த பணப்பையைக் கண்டு அதைக் கையில் எடுத்துக் கொண்டான். யாரோ ஒருவருடைய பணப்பை அவருக்குத் தெரியாமல் நழுவி விழுந்திருக்கிறது என்று அவன் எண்ணி சுற்றிலும் பார்த்தான். யாருமே தென்படவில்லை.

அப்போது சுப்பன் அந்த பையை அவிழ்த்துப் பார்த்து ஆச்சரியப்பட்டவனாய், ''ஆ! இதில் ஒரே தங்க நாணயங்களாக இருக்கின்றனவே! இதை நான் வைத்துக் கொள்ளக் கூடாது. நம்மூர் கிராம அதிகாரியிடம் கொடுத்து இதை இதன் சொந்தக்காரனிடம் ஒப்படைக்கச் சொல்ல வேண்டும்,'' எனக் கூறினான். பிறகு தன் தலைப்பாகையை எடுத்து அந்தப் பையை அதில் வைத்து அதைத் தன் இடுப்பில் இறுகக் கட்டிக் கொண்டான்.

அதைக் கண்ட கிழப் பிசாசு இளம் பிசாசிடம், ''இவனுக்குப் பணம் கொடுத்து உதவ நினைத்தாய். அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தெரியாத அப்பாவியாக இருக்கிறானே! இவனுக்கு நல்லதைச் சொல்ல யாராவது ஒருவர் இவனுடன் இருக்க வேண்டும். அதற்கு ஒரு வழி செய்கிறேன். நீ ஒரு பணக்காரன் போலாகி சுப்பனிடம் உள்ள பையை வாங்கிக் கொண்டு வா!'' என்றது.

இளம் பிசாசும் ஒரு பணக்காரன் போல மாறி சுப்பனருகே போய், ''ஆ! என் பணப்பை உனக்குக் கிடைத்ததா? நான் இங்கே படுத்து இளைப்பாறிவிட்டுப் போனேன். அவசரத்தில் பையை இங்கேயே விட்டுவிட்டேன். அதைக் கொடு!'' எனவே, சுப்பனும் மறுபேச்சு பேசாமல் அதை அவனிடம் கொடுத்துவிட்டான். இளம் பிசாசும் பணப்பையுடன் போய் கிழப் பிசாசைக் கண்டது.

கிழப் பிசாசும் ''சூலூரில் லட்சுமி என்னும் புத்திசாலிப் பெண் ஒருத்தி

இருக்கிறாள். இளம் பெண்ணான அவளை அவனது மாமன் மகன் முத்து வலுக்கட்டாயமாக இன்னும் இரண்டு நாட்களில் மணந்து கொள்ளப் போகிறான். அவன் ஒரு திருடன், குடிகாரன். காவலதிகாரிகளின் கண்களில் படாமல் தலைமறைவாகத் திரிபவன். இந்தத் திருமணத்தை நடக்கவிடாமல் செய்வதோடு லட்சுமியை இந்த சுப்பன் மணக்கும்படிச் செய்யலாம்,'' என்று கூறி இளம் பிசாசிடம் அதற்கான திட்டத்தைக் கூறியது.



லட்சுமியின் திருமணத்திற்கு அவள் வீட்டில் பந்தல் போடப் பட்டது. அவளது உறவினர்கள் வந்து அங்கு கூடினார்கள். முத்துவின் திருமணத்திற்கு முன் அவனைக் கைது செய்ய காவல் வீரர்கள் வேறு பதுங்கி இருந்தார்கள்.

இந்த நிலையில் கிழப் பிசாசு ஒரு குதிரை போலாகியது. இளம் பிசாசு தன் தோள்களில் கனமான பைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு முரடன் போல மாறி அந்தக் குதிரை மீது அமர்ந்து கொண்டது. முரடன் குதிரையுடன் லட்சுமியின் திருமணம் நடக்கும் இடத்திற்குச் சென்றான். பதுங்கி இருந்த காவல் வீரர்கள் அவன் தான் முத்து என எண்ணி, ''டேய் முத்து! தப்பி ஓடாதே, நில்! இன்று வசமாக மாட்டிக் கொண்டாய். உன் மீது கொலை, கொள்ளை என்று நீ செய்த பல குற்றங்கள் சாட்டப்பட்டுள்ளன. வா, எங்களுடன்!'' என்று கத்திக் கொண்டே அவனைத் துரத்திக் கொண்டு சென்றார்கள்.

குதிரையாக மாறிய பிசாசு முரடனாக மாறிய பிசாசுடன் மணப் பந்தலில் நுழைந்தது. அதைக் கண்டு அங்கிருந்தவர்கள் பயந்து அலறிக் கொண்டு ஓடினார்கள். பிசாசுகள் மணமகனாக நின்று கொண்டிருந்த முத்துவின் பக்கத்தில் போனதும் மறைந்து போயின. அவற்றைத் துரத்திக் கொண்டு வந்த காவல் வீரர்கள் மணமகனாக நின்ற முத்துவைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றார்கள். அதைத் தடுக்க முயன்ற அவனது தந்தையையும் காவல் வீரர்கள் பிடித்துக் கொண்டு போனார்கள்.

இப்படியாக திருமண வீட்டில் குழப்பம் ஏற்பட்டு லட்சுமியின்

விவாகம் தடைப்பட்டது. அப்போது வயதான பெண்மணி ஒருத்தி லட்சுமி யிடம் போய், ''இப்படி முத்து காவல் வீரர்களிடம் அகப்பட்டது உன் நல்ல காலத்தினாலேயே. அவனை மட்டும் நீ மணந்திருந்தால் வாழ்நாள் முழு வதும் நீ ஒரு கொள்ளைக்காரனின் மனைவி என்ற பெயரில் தான் இருக்க வேண்டும். உன் திருமணம் இந்த முகூர்த்தத்திலேயே நடக்க வேண் டும். நான் சொல்வதைக் கேள். நம்மூர் சுப்பன் இளைஞன், மிகவும் நல்லவன், நன்கு உழைப்பவன். உன்னிடம் உன் தந்தை விட்டுப் போன பணம் இருக்கிறது. நீ சுப்பனை மணந்து கொண்டு உன் பணத்தைக் கொண்டு அவனை ஏதாவது ஒரு தொழிலைச் செய்யச் சொல். அவன் முன்னுக்கு வந்து விடுவான். நீயும் சுகமாக இருக் கலாம்,'' என்றாள்.

லட்சுமியும் அந்த வயோதிக மாதிடம், ''நீங்கள் சொன்னது நல்ல யோசனையே. அதன்படியே செய் யலாம்,'' எனக் கூறினாள். உடனே சுப்பனை அழைத்துவர சிலர் அனுப்பப்பட்டார்கள். லட்சுமிக்கு அறிவுரை கூறிய வயோதிகப் பெண் மணி வேறு யாருமில்லை. கிழப் பிசாசு தான் அந்த உருவில் வந்தது!

லட்சுமியும் அந்தக் கிழவியிடம், ''எனக்கு சுப்பனைப் பற்றி நன்றாகத் தெரியும். கள்ளம், கபடு என்பதே இல்லாத அவனை நான் மணப்பது என் அதிர்ஷ்டமே!'' என்றாள். அந்தத் திருமணத்தை வேடிக்கை பார்க்க வந்த சுப்பனை உடனே லட்சுமியின் சில உறவினர்கள் அழைத்துப் போய் மணமகனாக்கிக் கொண்டு வந்தார் கள். லட்சுமிக்கும் சுப்பனுக்கும் திருமணம் நன்கு நடைபெற்றது.

அவர்கள் இருவரும் வயதான அந்தப் பெண்மணியை வணங்கி அவளது ஆசிகளைப் பெற்றார்கள். அப்போது இளம் பிசாசு முதியவள் வேடத்தில் இருந்த கிழப்பிசா சிடம், ''நாம் நினைத்ததை செய்து முடித்துவிட்டோம். இவர்களுக்கு நாம் கொடுக்க எண்ணிய பணத் தைக் கொடுத்துவிடுகிறேன்,'' என்று கூறி பணப்பையை அவர்கள் முன் போட்டது.





# மர்மக் குளம்

## 15

*(அன்ன ரதத்தைத் தாக்க வந்த ஜலராட்சஸர்களை ஜெயசீலனும் அவனது கூட்டாளிகளும் தாக்கி விரட்டினார்கள். மர்மக்குள மகேஸ்வரனும் அரசகுமாரி காஞ்சனமாலையும் ரதத்திலிருந்து விழுந்த இடத்திலிருந்து புகை கிளம்பி வந்து கொண்டு இருந்தது. சித்தசாதகனும் மகரகேதுவும் அந்த இடத்திற்கு முன் செல்ல, மற்றவர்கள் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அப்போது-)*

அன்ன ரதத்திலிருந்து மர்மக்குள மகேஸ்வரனும் அரசகுமாரி காஞ்சன மாலையும் மற்றொருவனும் வெவ் வேறு இடங்களில் விழுந்தார்கள். மகேஸ்வரன் 'பொத்'தென்று விழுந் தாலும் பெரிய காயம் எதுவும் ஏற்படவில்லை. ஆனால் புதிய சிக்கலில் மாட்டிக் கொண்டான்.

மகேஸ்வரன் காட்டில் விழுந்த இடத்தில் மனித மாமிசத்தை விரும் பும் காடர்கள் இருந்தார்கள். அவர் களுக்கு உண்ண ஒரு வார காலமாக எவ்வித மாமிசமும் கிடைக்க வில்லை. அதற்குக் காரணம் எங் கிருந்தோ அப்பகுதிக்கு வந்த புலி களின் கூட்டம் தான். அவை பல மிருகங்களைக் கொன்றன. எஞ்சிய மிருகங்கள் பயந்து வேறு பகுதி களுக்கு ஓடிவிட்டன.

மனித மாமிசம் உண்ணும்



காடர்களின் தலைவன் காட்டான். அவனுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான நான்கு காடர்கள் அவனிடம் தாம் தெரிந்து கொண்ட ஒரு விஷயத்தைக் கூறினார்கள்.

காடர்களில் சிலர் அப்பகுதியில் இருந்து வெளியேறப் போகிறார்கள் என்பது தான் அது. அவர்கள் அவ்வாறு செய்வது பாவச் செயலாகும் என்று காட்டான் எண்ணினான். அது காடர்கள் ஆலமரத்து ஆண்டவனைப் புறக்கணிப்பது போலாகிவிடும். பரம்பரை பரம்பரையாக ஆண்டுக்கு ஒருமுறை அந்த ஆண்டவனுக்கு மனித மாமிசம் படைத்து விழா கொண்டாடுவது நின்று போனால் என்ன விபரீதம் விளையுமோ என்று அவன் பயப்பட்டான்.

காடர்கள் யாரும் அப்பகுதியிலிருந்து வெளியேறாமல் ஆலமரத்து ஆண்டவன் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்ள காட்டான் அந்த ஆலமரத்து ஆண்டவன் கோயிலுக்குச் சென்றான். அது பழமையான பாழடைந்த கோயில். அன்று காட்டான் அந்த ஆலயத்துள் சென்றபோது ஓர் அதிசயத்தைக் கண்டான்.

அங்கிருந்த விக்கிரகத்தின் முன் ஒரு மலைப்பாம்பு ஓர் ஓநாயின் உடலைச் சுற்றி அழுத்திக் கொண்டிருந்தது. ஓநாயோ அந்தப் பாம்பின் தலையைக் கடித்துக் கொண்டிருந்தது. இவ்வாறு ஒன்று மற்றதைக் கொல்ல பயங்கரமாக முயன்று கொண்டிருந்தது.

இதைக் கண்ட காட்டான் பயந்து சற்றுப் பின்வாங்கி தூரத்தில் நின்று கொண்டு ஆலமரத்து ஆண்டவனை வணங்கி, ''தேவா! உன் மக்கள் உண்ண எதுவும் கிடைக்காமல் ஒரு வார காலமாக வாடிக் கொண்டிருக்கிறார்களே! இது உனக்குத் தெரியாதா? இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று கட்டளை இடு!'' என்று கை கூப்பி வணங்கிக் கேட்டான்.

அப்போது ஒரு பூனை 'மியாவ்' என்று கத்தியது. அதைக் கேட்ட காட்டான், ''இதுவா உன் கட்டளை? ஆனால் இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே!'' என்று பரிதாபமாகக் கதறினான். பிறகு ஏதோ யோசித்தவாறே அங்கிருந்து வேகவேகமாகத் திரும்பிச் சென்றான்.

ஒரு பரந்த மைதானத்தில் காடர்கள் ஆண்கள், பெண்கள்,

குழந்தைகள் என்று எல்லோரும் கூடி உணவிற்கு என்ன வழி செய்வது என்று விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது காட்டான் வேக வேகமாக அங்கு வந்து ''ஆலமரத்து ஆண்டவன் அருள்புரிந்துவிட்டான். எங்கே நம் பூசாரி?'' என்று உரக்கக் கூவினான். உடனே காடர்கள், ''ஆகா! ஆண்டவர் உணவு கொடுத்து விட்டாரா? எங்கே இருக்கிறது? அவை ஆடுகளா? மாடுகளா? மான்களா?'' என்று ஆவலுடன் கேட்டார்கள்.

காட்டானோ கோபத்தோடு ''நான் கேட்ட கேள்விக்குப் பதிலே இல்லையே! எங்கே தொலைந்தான் அந்தக் கிழ பூசாரி?'' என்று உறுமினான். அப்போது அந்தப் பூசாரி பசியால் தலை சுற்ற ஒரு மரத்தடியே கண்ணை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் மரத்தின் கீழ் உட்கார்ந்திருப்பதை ஒரு சிலர் காட்டானிடம் கூறவே, அவன் பூசாரி இருந்த இடத்திற்கே போய் தான் கோயிலில் கண்ட காட்சியைக் கூறி ''பூசாரி! இதன் பொருள் என்ன?'' என்று கேட்டான்.

பூசாரியோ பாதிக் கண்ணைத் திறந்தவாறே ''மாமிசம் கிடைத்தால் சாப்பிடு. கிடைக்காவிட்டால் காய், கனி, கிழங்கு, இலை, புல் என்று எதை வேண்டுமானாலும் சாப்பிடு என்று ஆண்டவன் கட்டளை இடுகிறான்,'' என்றான்.

அதைக் கேட்ட காட்டான் கோபம் கொண்டு அவன் முதுகில் ஓங்கி ஓர்



அடி கொடுத்து ''ஏய் பூசாரி! பசி மயக்கத்தில் என்ன உளறுகிறாய்? நம் இனத்தவர் மாமிசத்தைத் தவிர வேறு எதையும் உண்பது இல்லை என்று சபதம் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை மறந்துவிட்டாயா?'' என்று அதட்டிக் கேட்டான். அவன் கொடுத்த அடி பூசாரிக்குத் தன் நினைவுவரச் செய்தது.

அவன் காட்டானிடம், ''இப்போது சரியாகச் சொல். முன்பு என்னிடம் என்ன சொன்னாய்? அதையே திரும்பச் சொல்,'' என்றான். அவன் எழுந்திருக்க முயன்ற போது நிலை தடுமாறியதால் இரு காடர் இளைஞர்கள் அவனைப் பிடித்து நிற்க வைத்தார்கள். காட்டான் ஆலமரத்து ஆலயத்தில் தான் கண்டதை மறுபடியும் ஒரு தடவை சொன்னான்.

பூசாரியும் அதை முழுவதையும்



கவனமாகக் கேட்டுவிட்டு ஏதோ யோசனை செய்தான். சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் ஒரு பிடி மண்ணை எடுத்துக் கொண்டு ஏதோ மந்திரங்களை உச்சரித்தான்.

பிறகு அவன் அந்த மண்ணை அங்கிருந்த எல்லோர் மீதும் தூவி ''இங்கே மரம் செடி கொடி என எதுவுமே இல்லாத இடத்தில் அடுப்பை மூட்டி அதன் மீது ஒரு பாத்திரத்தில் தண்ணீர் ஊற்றிக் கொதிக்கவிடுங்கள். சிலர் ஆலமரத்து ஆண்டவன் கோயிலுக்குப் போய் அங்கே உள்ள மலைப் பாம்பையும் ஓநாயையும் பூனையையும் இங்கே கொண்டு வாருங்கள்!'' என்றான்.

காட்டானோ, ''அந்தப் பூனை இன்னமுமா அங்கே இருக்கும்? மலைப்பாம்பும் ஓநாயும் ஒன்றை மற்றது கொன்றிருக்கும். ஆமாம், நம் ஆலமரத்து ஆண்டவன் ஏன் இதைச் செய்து காட்டினான்?'' என்று பூசாரியிடம் கேட்டான். அவ்வளவு தான். மறுநிமிடமே பூசாரி பேயாட்டம் ஆடி ''அடே! என்னைத் தெரியவில்லையா? நான்தான் ஆலமரத்து ஆண்டவன். என் அருளால் உங்களுக்கு மிருகங்களின் மாமிசம் மட்டும் அல்ல, மனித மாமிசமும் கிடைக்கப் போகிறது. எல்லோரும் போங்கள்,'' என்று பலத்த குரலில் கத்தினான்.

அதன் பிறகு பூசாரி முன்பு கூறியபடி காலி இடத்தில் அடுப்பு மூட்டப்பட்டது. அதன் மீது பெரிய வாணலியை வைத்து அதில் நீரை விட்டுக் கொதிக்க வைத்தார்கள். அடுப்பில் எரிந்த கட்டைகளிலிருந்து வெள்ளைநிறப் புகை உயரக் கிளம்பியது. இந்த சமயத்தில் தான் ஆகாயத்தில் அன்ன ரதத்தில் மர்மக்குள மகேஸ்வரன் அப்பகுதிக்கு வந்தான். அப்போது அந்த ரதத்தைப் பருந்துகள் தாக்கிக் கவிழச் செய்தன. அதிலிருந்து மகேஸ்வரன், அரசகுமாரி காஞ்சன மாலை, தேரோட்டி ஆகிய மூவரும் கீழே விழுந்தார்கள். மெய்க் காவலாளி மட்டும் ரதத்திலுள்ள மரத் தூணை உறுதியாகப் பற்றிக் கொண்டதால் கீழே விழவில்லை.

அன்ன ரதத்திலிருந்து மூவரும் ஒரே இடத்தில் விழவில்லை. வெவ்வேறு இடங்களில் தான் விழுந்தார்கள். பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்த பூசாரி மகேஸ்வரன் ஆகாயத்திலிருந்து விழுவதைப் பார்த்துவிட்டான். உடனே அவன், ''அதோ

பாருங்கள். ஆலமரத்து ஆண்டவன் நமக்கு ஆகாயத்திலிருந்து ஒரு மனிதனைக் கீழே போட்டிருக்கிறார். இப்போது மனிதன், மலைப் பாம்பு, ஓநாய், பூனை என்று நான்கு வகையான மாமிசங்கள் கிடைக்கப் போகின்றன. முதலில் அவற்றை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிட்டு பிறகு எடுத்து எல்லோரும் உண்போம்,'' என்றான்.



காடர்கள் அண்ணாந்து ஆகாயத்தைப் பார்த்தார்கள். ஒரு மனிதன் விழுந்து கொண்டிருப்பதைக் கண்டு உற்சாகத்துடன் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள். மர்மக்குள மகேஸ்வரன் நேராகக் காடர்கள் வெந்நீர் காய்ச்சிக் கொண்டிருந்த வாணலியில் விழுந்தான். பூசாரி சிரித்தவாறே அவனருகே வந்து பார்த்து, ''ஆகா! 'கொழுக் மொழுக்'கென்று இருக்கும் ஒரு மனிதனை ஆண்டவன் நமக்கு அனுப்பி இருக்கிறான். அதுவும் நேராக வெந்நீரில் விழ வைத்து விரைவில் வேகச் செய்திருக்கிறான்,'' என்றான்.

அப்போது மகேஸ்வரன் தான் பெரிய ஆபத்தில் அகப்பட்டுவிட்டதைக் கண்டான். வாணலி நீர் சூடாகிக் கொண்டே இருந்தது. அவன் வாணலியிலிருந்து வெளியே வர முயன்றான். பூசாரி கையில் கட்டையை எடுத்துக் கொண்டு மிரட்டவே, மகேஸ்வரன் பூசாரியிடம் நயமாகப் பேசி தப்பிவிட எண்ணினான். அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்தான். அவனுக்கு மனதில் ஒரு வழி தோன்றியது. காடர்கள் மனித மாமிசத்தை விரும்புபவர்கள். எனவே அந்த ஆசையைக் காட்டித் தப்பித்துவிட வேண்டும் என்று நினைத்தான்.

அதனால் அவன் பூசாரியிடம், ''பூசாரி! உங்கள் ஆண்டவன் என்னோடு மூன்று பேர்களை உங்களுக்காக அனுப்பினாரே! அவர்களைப் பிடிக்கவில்லையா? என்னை அழைத்துக் கொண்டு நீ போனால் அவர்கள் இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன். அவர்களையும் பிடித்து எங்கள் நால்வரையும் வேகவைத்து உங்கள் ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிட்டு சந்தோஷமாகச் சாப்பிடுங்கள்,'' என்றான்.

அதைக் கேட்டு மகிழ்ந்து போன பூசாரி மகேஸ்வரனை வாணலியில் இருந்து வெளியே எடுத்துவிட்டான். ஆலயத்திற்குச் சென்ற காட்டானுக்கு

அந்த சமாச்சாரத்தைச் சொல்ல ஒருவனை பூசாரி அனுப்பினான். அவன் வேறு சிலருடன் மகேஸ்வரனைக் கூட்டிக் கொண்டு மற்ற மூவரை அழைத்துவரக் கிளம்பினான்.

மாலையாகும்வரை அவர்கள் நடந்து கொண்டே இருந்தார்கள். அப்போது மகேஸ்வரன் தன் தேரோட்டியின் பூண் பிடித்த தடி ஓரிடத்தில் விழுந்து கிடப்பதைக் கண்டான். அப்போது அவன் தன்னோடு வந்தவர்கள் அங்கே எங்கேயோ தான் விழுந்திருக்க வேண்டும் என்று ஊகித்துவிட்டான். இப்போது அவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

பூசாரி மகேஸ்வரனிடம், ''எங்கே அவர்கள் காணவில்லையே!'' என்று கேட்டான். மகேஸ்வரனும், ''இங்கே தான் விழுந்து கிடப்பார்கள். நாம் சற்றுப் பொறுமையுடன் தேடுவோம். கண்டிப்பாகக் கிடைத்துவிடுவார்கள்,'' என்றான்.

பூசாரியும், ''ஆமாம். அந்த ஆலமரத்து ஆண்டவன் எங்களுக்கு உங்களை எல்லாம் அனுப்பி இருக்கிறான். எனவே உங்கள் எல்லோரையும் கொண்டுபோய் அந்த ஆண்டவனுக்கு முதலில் படைத்தாக வேண்டும்,'' என்றான்.

மகேஸ்வரனும், ''நீ சொல்வது சரிதான். ஆண்டவன் நமக்கு அளித்ததை முதலில் அவனுக்கு அர்ப்பணித்துவிட்டு பிறகு அதை அவன் அளிக்கும் பிரசாதமாக ஏற்க வேண்டும். இப்போது முதலில் அவன் என்னோடு அனுப்பியவர்களைத் தேடு. பிறகு எங்களை உன் ஆண்டவனுக்கு அர்ப்பணி!'' என்றான்.

மகேஸ்வரன் நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தான். சற்று தூரத்தில் அன்ன ரதம் போய்க் கொண்டிப்பதை அவன் கண்டான். இதே சமயம் புகை கிளம்பிய இடத்தை நோக்கி சித்த சாதகனும் மகரகேதுவும் வந்து கொண்டிருந்தார்கள். சித்தசாதகன் 'ஜெய்மகாகாளி' எனக் கத்திக் கொண்டே வந்தான். அதைக் கேட்டு பூசாரியும் அவனோடு வந்தவர்களும் நடுங்கலானார்கள். *(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# மக்களைப் புரிந்துகொள்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பிறகு அவன் கீழே இறங்கி அதைச் சுமந்துகொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அத னுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் இப்படி ஒரு வேலையில் விடாமுயற்சி யுடன் ஈடுபட்டிருப்பதைப் பார்த்தால் நீ மக்களின் மன தைப் புரிந்து கொள்ளாமல் இதைச் செய்கிறாயோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இதை உனக்கு விளக்க பண்டிதர்

பரமசிவனார் என்பவரின் கதையைக் கூறுகிறேன், கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

கரும்பூரின் கிராம அதிகாரி கனக ராசன். அவன் தன்னை எல்லோரும் பெரும் பண்டிதர் என்றும் மாபெரும் அறிவாளி என்றும் புகழ வேண்டும் என்றும் ஆசைப்பட்டான். அதனால் தினமும் அவன் கூட்டத்தை மாலை வேளையில் கூட்டி புராணங்களைக் கூறி வேதாந்த விஷயங்களை விளக்கியும் வரலானான்.

அவ்வூராரும் அவனது சொற் பொழிவு முடிந்ததும் தம் சந்தேகங் களைக் கேட்க, அவனும் தனக்குத் தோன்றியதை விடையாகக் கூறி விடுவான். அவர்களும் அதைக் கேட்டுக் கொண்டு பேசாமல் இருந்து விடுவார்கள்.

ஒருநாள் அந்த ஊருக்கு முத்து மாணிக்கம் என்பவன் வந்தான். அவனும் அன்று மாலையில் கனக ராசனின் சொற்பொழிவைக் கேட் டான். கனகராசன் கஜேந்திர மோட்சம் என்ற கதையைக் கூறி முடித்தான்.

அப்போது அந்த ஊர்க்காரன் ஒருவன் எழுந்து, ''ஐயா! பஞ்ச பாண்டவர்களை மணந்த துரௌ பதியைப் பதிவிரதை என்று எப்படிக் கூற முடியும்?'' என்று கேட்டான். கனகராசனும், ''நீ கேட்ட கேள்வி யிலேயே விடை இருக்கிறது,'' என்று கூறவே, அவன் மேற்கொண்டு எது வும் கேட்கவில்லை.

இன்னொருவன் ''சீதையைக் காட் டிற்கு அனுப்பிய இராமரை எப்படி ஆதர்ச மனிதர் என்று கூற முடியும்?'' எனக் கேட்கவே, கனகராசனும்,



''சீதை தான் அப்படிச் சொன்னாள். அதனால் அவளைத் தான் கேட்க வேண்டும்,'' என்றான்.

இப்படியே கேட்கப்பட்ட வினாக்கள் எல்லாம் கஜேந்திர மோட்சத்திற்குச் சம்பந்தப்பட்டதாக இருக்கவில்லை. கனகராசன் அளித்த விடைகளும் சரியானதாக இல்லை.

இதைக் கண்ட முத்துமாணிக்கம், ''இவரைவிட என் சின்னத் தாத்தா அம்பலவாணர் நன்கு கதைகள் சொல்வாரே. நிறையப் படித்தவர் ஆயிற்றே. இவ்வூரார் இலக்கியச் சொற்பொழிவுகளை ரசித்துக் கேட்கிறார்களே, அதனால் அம்பலவாணரை இங்கு அழைத்து வந்து சொற்பொழிவுகள் ஆற்ற வைக்கலாம் என்று நினைத்தான்.

அதனால் கிராம அதிகாரியான கனகராசனைக் கண்டு, ''ஐயா! நீங்கள் நடத்தும் கூட்டங்கள் மிக நன்றாக உள்ளன. உங்களைப் போன்றவர் தாம் அம்பலவாணர் என்ற பண்டிதர். அவரது சொற்பொழிவுகளை இங்கு ஏற்பாடு செய்ய முடியுமா?'' என்று கேட்டான்.

கனகராசனும், ''ஓஹோ! அவர் என்னைவிட மகா மேதாவியா? அப்படியானால் பரீட்சித்துப் பார்த்து விட வேண்டியதுதான்,'' எனவே முத்துமாணிக்கமும், ''அவர் மகா வித்வான் தான். அரசாங்க விருதைக் கூடப் பெற்றிருக்கிறார்,'' என்றான்.

கனகராசனும், ''அரசாங்க விருதை யார் வேண்டுமானாலும் பெற்று விடலாம். அதற்குப் புலமை தேவை



இல்லை. சிபாரிசு தான் வேண்டும். அது கிடக்கட்டும். உன் அம்பலவாணரை இந்த ஊருக்கு அழைத்து வா! அவரது சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்யலாம்,'' என்றான்.

முத்துமாணிக்கம் தன் ஊருக்குப் போய் அம்பலவாணரிடம் விஷயத்தைக் கூறினான். அவரும், ''கரும்பூர் பகுதியில் புராணக் கதைகளைக் கேட்டு ரசிப்பவர்கள் இருக்கிறார்களா? ஆச்சரியமாக இருக்கிறதே. சரி, நான் அந்த ஊருக்குப் போய் பிரசங்கம் செய்கிறேன். என்னை அழைத்துக் கொண்டு போ!'' என்றார்.

முத்துமாணிக்கமும் அவரை கூட்டிக் கொண்டு கரும்பூருக்குப் போனான். அங்கு அவர் கூட்டத்தில் கஜேந்திர மோட்சக் கதையையே நன்கு கூறினார். அதை கனகராசனை விட அவர் விளக்கமாயும் யாவரையும் கவரும் விதத்தில் சொன்னதைக்



கண்டு முத்துமாணிக்கம் மகிழ்ந்து போனான். ஆனால் அந்த ஊர்க்காரர்களில் ஒருவன் கூட எழுந்து கேள்வியே கேட்கவில்லை.

அப்போது முத்துமாணிக்கம் கனகராசனிடம், ''சபையோர் இவர் சொன்னதை நன்கு புரிந்து கொண்டதால் அவர்களுக்கு எந்த சந்தேகமும் ஏற்படவில்லை. அதனால் கேள்வியும் கேட்கவில்லை,'' என்றான்.

கனகராசனோ, ''இவர் சொன்னது எதுவும் புரியாததால் தான் அவர்கள் கேள்வி கேட்கவில்லை. நான் பிரசங்கம் செய்தால் புரிந்து கொண்டு கேள்விகள் கேட்பார்கள். நான் இப்போதே ருக்மிணி கல்யாணம் என்ற கதையைக் கூறுகிறேன். என் சொற்பொழிவு முடிந்த உடனே இவர்கள் எவ்வளவு கேள்விகளைக் கேட்கிறார்கள் என்று நீயே பார்!'' என்றான்.

கனகராசன் ருக்மிணி கல்யாணக் கதையைச் சொல்லி முடித்ததும் ஒவ்வொருவராக எழுந்து அந்தக் கதைக்குச் சம்பந்தமே இல்லாத கேள்விகளைக் கேட்டார்கள். கனகராசனும் அவற்றிற்கான விடைகள் என்று எதைஎதையோ கூறினான்.

அதன் பிறகு அவன் முத்துமாணிக்கத்திடம், ''இப்போதாவது தெரிந்ததா என் புலமை எப்படிப் பட்டது என்று. என் தொகுதியில் இன்னும் ஓரிரு கிராமங்களில் நாங்கள் இருவருமே கதை சொல்கிறோம். அப்போது மக்கள் என்ன செய்கிறார்கள் என்றும் பார்ப்போம்,'' என்றான்.

அதன்படி இரு கிராமங்களின் இருவரின் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த இரு கிராமங்களிலும் யாரும் அம்பலவாணர் கதை சொல்லி முடிந்ததும் கேள்வி கேட்கவில்லை. ஆனால் கனகராசன் பேசி முடித்ததும் அவன் கூறிய கதைகளுக்குச் சம்பந்தமே இல்லாத கேள்விகளைத் தான் கேட்டார்கள். கனகராசனும் அவற்றின் விடைகள் என்று வாய்க்கு வந்ததைக் கூறினான். இதைக் கண்டு முத்துமாணிக்கம் மட்டும் அல்ல, அம்பலவாணரும் ஆச்சரியப்பட்டார்.

அப்போது அந்தக் கூட்டத்தில் அம்பலவாணரை நன்கு அறிந்த ஒருவர் இருந்தார். அவர் முத்துமாணிக்கத்தையும் அம்பலவாணரையும் தன் வீட்டிற்கு அழைத்துப் போனார்.

அவர்களிடம், "நீங்கள் ஏன் இந்தக் கனகராசனுடன் அவனது தொகுதியில் போட்டி போடுகிறீர்கள்? இவன் பேசும் கூட்டங்களில் மட்டுமே இத்தொகுதி மக்கள் சொற்பொழிவு முடிந்ததும் ஏதேதோ கேள்விகளைக்கேட்பார்கள். அவ்வாறு கேட்பதும் இந்த அதிகாரியின் தயவு தங்களுக்கு வேண்டும் என்பதற்காகத் தான். கூட்டத்தவர் இவன் சொல்வதைக் கவனித்துக் கேட்பதும் இல்லை. அவர்கள் கேள்விகள் கேட்க வேண்டும் என்று கட்டாயப்படுத்தப் படுகிறார்கள். மேலும் கனகராசன் தன் அடியாட்களைக் கூட்டத்தில் கலந்து இருக்கச் சொல்லி அவர்களைக் கேள்வி கேட்க வைக்கிறான். இதனால் மக்கள் பயந்து அவனிடம் கேள்விகளைக் கேட்கிறார்கள். இதனால் கனகராசனுக்கு பேரறிஞன் என்ற பெயர் ஏற்படுகிறது. வேறு பண்டிதர்கள் இத்தொகுதியில் சொற்பொழிவு ஆற்ற வந்தால் யாருமே அவர்களிடம் கேள்விகள் கேட்கக் கூடாது என்று கனகராசனின் அடியாட்கள் பயமுறுத்துவார்கள். இது தான் கனகராசனுக்கு மாபெரும் பண்டிதர் எனப் பெயர் வரக் காரணம்," என்றார்.

அதைக் கேட்டு முத்துமாணிக்கமும் அம்பலவாணரும் ஆச்சரியப் பட்டு, "இப்படியும் நடக்கிறதா? மிகவும் ஆச்சரியமாக இருக்கிறதே!" என்று கூறினார்கள்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னா! அம்பலவாணரின் நண்பர் ஏன் கனகராசன் தொகுதியில் பண்டிதர்கள் பேசக் கூடாது என்றார்?



இதனால் மற்ற பண்டிதர்களுக்கு அத்தொகுதியில் பேரும்புகழும் கிடைக்கவில்லை, இதற்குக் காரணம் என்ன? மக்கள் ஏன் மற்ற பண்டிதர்களிடம் கேள்விகளைக் கேட்காமல் அதிகாரியிடம் மட்டுமே கேள்விகள் கேட்கிறார்கள்? இது ஏன்? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும், ''கனகராசன் கிராம அதிகாரி அரசாங்க அதிகாரி என்றாலே மக்கள் அவர்களைக் கண்டு பயந்து விடுவார்கள். தம்முடைய வேலை நடக்க வேண்டும் என்றால் கிராம அதிகாரியின் தயவு அவர்களுக்கு வேண்டும்.

ஒரு கிராம அதிகாரி மனதில் நினைத்துவிட்டால் தன் தொகுதியில் உள்ளவர்களுக்கு என்ன கெடுதல் வேண்டுமானாலும் செய்துவிடுவான். இப்படி ஒரு பயத்தை அவன் மக்களின் மனதில் ஏற்படுத்தி அவர்கள் தன்னைப் மகா பண்டிதர் எனப் புகழும்படிச் செய்கிறான். அது மட்டும் அல்ல. அவன் தன் தொகுதிக்கு வரும் எந்தப் பண்டிதரையும் மக்கள் மகாவித்வான் என்றோ மாபெரும் மேதை என்றோ புகழாதபடி பார்த்துக் கொண்டதோடு மக்கள் தன்னை மட்டும் அறிவாளி என எண்ண வேண்டும் என்பதற்காக அடியாட்களை வைத்துக் கூட்டங்களில் கேள்விகளை கேட்க வைப்பதோடு அவர்களைக் கொண்டு மக்களை மிரட்டினான். மக்களால் இந்த நிலையில் என்ன செய்ய முடியும்? அவர்களுக்குத் தம் வேலைகள் நடக்க அவனது தயவு வேண்டும். அதனால் தான் அவனது சொற்பொழிவு முடிந்ததும் சம்பந்தம் இல்லாமல் அவனிடம் கேள்விகளைக் கேட்கிறார்கள். இவனது புகழுக்குக் காரணம் மக்களின் மனமே. அந்த மனம் தான் இங்கு மற்ற பண்டிதர்களுக்குப் புகழ் கிடைக்காமல் செய்து வருகிறது,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# சோலாநார் பொம்மைகள்

சோலா என்பது சதுப்பு நிலத்தில் வளரும் ஒரு தாவர வகை. இது மேற்கு வங்காளத்தில் நிறைய வளர்கிறது. இதன் குச்சிகளிலிருந்து எடுக்கப்படும் நார்கள் மெத்தென்று இருக்கும். வங்காளக் கைவினைக் கலைஞர்கள் இவ்வகை நாரால் பல அழகிய பொம்மைகளையும், கலையம்சப் பொருள்களையும் உருவாக்குகிறார்கள்.

இன்று நீங்கள் தோலாலும் செயற்கைப் பஞ்சுகளாலும் செய்யப்படும் கரடி, முயல் போன்ற பொம்மைகளை காண்கிறீர்கள். இவை போன்ற மெத்தென இருக்கும் பொம்மைகளை நம் நாட்டில் பல நூற்றாண்டுகளாகத் தயாரித்து வருகிறார்கள் என்றால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள் தானே! இவை சோலா நாரால் தயாரிக்கப்படுபவை.

சோலாக் குச்சியின் மேல் பட்டையைச் சீவியதும் யானைத் தந்த நிறத்தில் நார்ப் பகுதி தென்படுகிறது. இந்த நார் வெளியே எடுக்கப்பட்டு சிக்கு விழாமல் சீவி அதைக் கொண்டு பொம்மைகளையும் மற்ற அலங்காரப் பொருள்களையும் தயாரிக்கிறார்கள். இவற்றிற்குத் தக்க வண்ணங்களையும் தீட்டி அழகுபடச் செய்கிறார்கள்.

ஆங்கிலேயர்கள் ஆட்சி புரிந்த காலத்தில் அவர்கள் சோலா நாரால் ஆன தொப்பிகளை அணிந்து சூரிய வெப்பம் தாக்காமல் தம்மைப் பாதுகாத்துக் கொண்டார்கள். வங்காளத்தில் துர்க்கா பூஜை நடக்கும்போது துர்க்கா தேவியின் உருவ பொம்மைகளைப் பார்த்தால் அவை சோலா நாரினால் அலங்கரிக்கப்பட்டிருப்பது தெரிய வரும்.

ஹிந்து வங்காளிகள் வீட்டுத் திருமணங்களில் மணமகன் தலையில் அணியும் டோபோர் மற்றும் மணமகள் அணியும் முகுடமும் இதனால் உருவாக்கப்பட்டதே!





# வாய்ப்பந்தல் வீரன்

பாசூருக்குப் புதிதாக வந்த பரமசிவம் இரண்டு ஏக்கர் நிலத்தை வாங்கி விவசாயம் செய்தான். ஐந்து கறவை மாடுகளை வாங்கிப் பால் வியாபாரமும் செய்து வந்தான்.

அவன் அந்த ஊருக்கு வந்த இரண்டாவது மாதத்திலேயே அவனது மகளுக்கு நல்ல மணமகன் கிடைத்தான். தன் மகளின் திருமணச் செலவிற்கு ஓர் ஆயிரம் ரூபாய் குறையவே அதை எப்படிப் புரட்டுவது என்று அவன் யோசித்தான்.

அவன் தான் புதிதாக வாங்கிய நிலத்தின் மீதோ அல்லது மாடுகளின் மீதோ கடன் வாங்க விரும்பவில்லை. யாராவது அந்த ஊரில் தன்னை நம்பிக் கடன் கொடுக்கத் தயாராக இருக்கிறார்களா என்று பார்க்கலானான். அவனோ அந்த ஊருக்குப் புதியவன். அதனால் அவனை நம்பி யாரும் கடன் கொடுக்கமாட்டார்கள் என்று தெரிந்து போயிற்று.

அப்போது அவனது பக்கத்து வீட்டுக்காரன், ''இந்த ஊரில் உன்னை மட்டும் நம்பிப் பணம் கொடுக்க யாருமே கிடைக்கமாட்டார்கள். உனக்கு மட்டும் அதிர்ஷ்டம் இருந்தால் மாதவன் என்பவனிடம் கேட்டுப் பார், ஒருவேளை கிடைத்தாலும் கிடைக்கலாம். அதோ அவனே இங்கே வந்து கொண்டிருக்கிறான்,'' என்றான்.

மாதவன் அங்கு வந்து, ''என்ன வேலப்பா! பத்தே நாளில் திருப்பித் தந்துவிடுவதாகக் கூறி நூறு ரூபாய் வாங்கிக் கொண்டு போனாயே! மாதம் இரண்டாகிவிட்டது, பைசா வரவில்லை, நீயும் கண்ணில் படவில்லையே! பணம் கிடக்கட்டும். நீ எப்போதும் போல என் வீட்டிற்கு வந்து போய்க் கொண்டிரு,'' என்று கூறிவிட்டுப் போனான்.

அப்போது பரமசிவம் தன்னுடைய பக்கத்து வீட்டுக்காரனிடம்,

- கௌரி நாதன் -

''இவனிடம் தான் பணம் கேட்கச் சொன்னாயா?'' என்று கேட்டான்.

அவனும் ''ஆம், நல்லவன் தான். ஒருவனுக்கு உதவ வேண்டும் என்று நினைத்தால் கண்டிப்பாக உதவுவான். உதவக் கூடாது என்று நினைத்துவிட்டாலோ வெறும் வார்த்தைகளை அள்ளி வீசியே சமாளித்துவிடுவான்,'' என்றான்.

பரமசிவமும், ''சரி, கேட்டுத் தான் பார்க்கிறேன். அப்புறம் நடக்கிறபடி நடக்கட்டும்,'' என்றான். பக்கத்து வீட்டுக்காரனும் ''அவன் ஒரு மாதிரி. சட்டென வார்த்தைகளைக் கொட்டி விடுவான். அதனால் அவனிடம் பணம் கேட்க எல்லோருமே பயப் படுவார்கள். எதற்கும் நீ கொஞ்சம் எச்சரிக்கையாக இருப்பதே நல்லது,'' என்றான்.

பரமசிவமும், ''பணம் கடன் கொடுக்காவிட்டால் அவன் ஏன் வந்து என்னிடம் பேசப் போகிறான்? எனக்கு அதிர்ஷ்டம் இருந்தால் பணம் கிடைக்கும்,'' என்றான்.

பரமசிவம் அன்று மாலையில் மாதவனை அவனது வீட்டில் பார்த்தான். அப்போது மாதவனும் அவனது தந்தையும் வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு ஏதோ காரசாரமாகப் பேசிக் கொண்டு இருந்தார்கள்.

மாதவன் உரத்த குரலில் ''நீங்கள் தானே 'பசுவை வாங்கு, வாங்கு!' என்று பலதடவை கூறினீர்கள். ஆனால் நான் சொன்னதை நீங்கள் கேட்கவில்லை. இருந்தாலும் உங்கள்



மனது வேதனைப்படக் கூடாதே என்பதற்காகவே நீங்கள் சொன்ன படி செய்தேன்,'' என்றான்.

அதற்கு அவனது தந்தை, ''மகனே! என்ன செய்யலாம் என்று நீ என்னைக் கேட்டதால் தானே நான் அப்படிச் சொன்னேன். நீ என்ன செய்தாலும் எனக்கு சந்தோஷமே, வீணாக வருந்தாதே!'' என்றான்.

இதைக் கேட்ட பரமசிவம், 'உண்மையிலேயே மாதவன் நல்ல மனம் படைத்தவன்தான். இவனை ஒரு மாதிரியானவன் என்று அந்த பக்கத்து வீட்டுக்காரன் ஏன் கூறினான்?'' என்று யோசித்தான்.

அப்போது மாதவன் பரமசிவத்தைப் பார்த்துவிட்டு, ''ஓ, நீங்கள் வேலப்பனின் பக்கத்து வீட்டுக்காரர் தானே?'' என்று கேட்டான். பரம



திருமணம் நிச்சயமாகி இருக்கிறது. அதற்கான செலவில் ஆயிரம் ரூபாய் குறைகிறது. அதை உங்களிடம் கடனாகக் கேட்கவே வந்தேன்,'' என்றான்.

அதைக் கேட்ட மாதவன் உடனேயே, ''இப்படிச் சொல்கிறேனே என்று தவறாக நினைக்காதீர்கள். எனக்கு என்று சில கட்டுப்பாடுகளை நான் விதித்துக் கொண்டிருக்கிறேன். புதிதாக வருபவருடன் நட்பு கடன் கொடுப்பதில் ஆரம்பமாகக் கூடாது என்பது அவற்றில் ஒன்று. உங்களது தற்போதைய தேவைக்குக் கடன் கேட்பது சரியே. அதுவும் ஒரு திருமணம் நடக்கக் கடன் கொடுத்தால் புண்ணியமே கிடைக்கும். ஆனால் நான் வகுத்துக் கொண்ட கட்டுப்பாட்டை மீற முடியாது. எனவே உங்களுக்குக் கடன் கொடுக்க முடியாமல் போவதற்குமிக மிக வருந்துகிறேன்,'' என்றான்.

சிவமும், ''ஆமாம். என் பெயர் பரமசிவம். வேலப்பர் உங்களைப் பற்றிப் புகழ்ந்து கூறி இருக்கிறார். இன்று காலையில் நானும் அவரும் பேசிக் கொண்டிருந்த போது நீங்கள் அங்கு வந்தீர்கள். அப்போது தான் உங்களை முதன்முதலாகப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது,'' என்றான்.

மாதவனும், ''ஆமாம். அப்போது உங்களுடன் பேசாமல் போனதற்கு வருந்துகிறேன். தவறாக எண்ணி விடாதீர்கள்,'' என்றான்.

அதற்கு பரமசிவம் ''இதில் தவறாக நான் நினைக்க என்ன இருக்கிறது? உங்களுக்கு என்னைத் தெரியாதே! அதனால் தான் நீங்கள் என்னுடன் பேசவில்லை. இப்போது நான் என் தேவைக்காகப் பேச நானே வந்திருக்கிறேன். என் மகளுக்குத்

பரமசிவம் என்ன செய்வான் பாவம். முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வீட்டிற்குத் திரும்பிச் சென்றான். அப்போது அவனது அண்ணன் அருணாசலம் வந்திருந்தான்.

அவன் பரமசிவத்திடம், ''தம்பீ! எதிர்பாராதவிதமாக எனக்கு ஓர் இடத்திலிருந்து பணம் கிடைத்தது. இந்தா ஆயிரம் ரூபாய். இதை உன் மகளின் திருமணத்திற்குப் பயன் படுத்திக் கொள்!'' என்று கூறிப் பணத்தைக் கொடுத்தான்.

பரமசிவமும் ''என் பிரச்சினை நல்லவிதமாகத் தீர்ந்தது. அதனால்

இப்போதே கோயிலுக்குப் போய் அர்ச்சனை செய்துவிட்டு வருகிறேன்,'' என்று கூறி கோவிலுக்குச் சென்றான்.

கோயிலில் அவன் மாதவனைச் சந்தித்தான். மாதவனும் ''நீங்கள் கடவுள் அனுக்கிரகத்தைக் கேட்க வந்திருக்கிறீர்கள். என்னால் தான் உங்களுக்குக் கடன் கொடுத்து உதவ முடியவில்லை. இதற்காக நான் எவ்வளவு வருந்துகிறேன், தெரியுமா? நான் கடன் கொடுக்கவில்லையே என்று எண்ணி நீங்கள் கவலைப்படுவதும் எனக்குத் தெரியும். என்னிடம் பணம் இருந்தும் என் கட்டுப்பாட்டை மீறி உங்களுக்கு உதவ முடியாமல் போயிற்று. நானும் என் மனதைத் தேற்றிக் கொள்ளவே கோயிலுக்கு வந்தேன்,'' என்றான்.

பரமசிவமும், ''முன்பின் தெரியாத உங்களிடம் நான் கடன் கேட்டது என்னுடைய தவறுதான். அதற்காக வருந்துகிறேன். நல்லவேளையாகக் கடவுள் அருளால் எதிர்பாராவிதமாக எனக்குப் பணம் கிடைத்துவிட்டது,'' என்றான்.

உடனே மாதவன், ''கடவுள் நல்லவர்களைக் கைவிட மாட்டார். நீங்கள் எவ்வளவு நல்லவர். உங்களுக்குக் கடன் கொடுத்து உதவ முடியவில்லையே என்று தான் இப்பொழுதும் வருத்தமாக இருக்கிறது,'' என்றான்.

பரமசிவமும் ''இதற்காக நீங்கள் வருந்துவதுதான் எனக்கு வேதனையை அளிக்கிறது. இதுபற்றி



இனி நீங்கள் கவலைப்படாதீர்கள்,'' என்று கூறிவிட்டு அர்ச்சனையை முடித்துக் கொண்டு சென்றான்.

இதற்குப் பின் பரமசிவம் மாதவனைத் துணிக்கடை, மளிகைக் கடை என்ற இடங்களில் சந்தித்த போதும் அவன் தான் கடன் கொடுக்க முடியாது போனது பற்றியே புலம்பித் தீர்த்தான்.

பரமசிவம் மாதவனைத் தன் மகளின் திருமணத்திற்கு வருமாறு அழைக்கவே, அவனும் வந்தான். அப்போதும் மாதவன் தான் பரமசிவத்திற்குக் கடன் கொடுத்து உதவ முடியவில்லையே என்று புலம்பினான். பரமசிவத்தால் இந்தப் புலம்பலை எவ்வளவு நேரம்வரை தான் கேட்டுக் கொண்டிருக்க முடியும்?

அந்த சமயத்தில் பரமசிவத்தின்

அண்ணன் அங்கு வந்து ''பரமா! சம்மந்தி கோபமாக இரைந்து கொண்டிருக்கிறார். நீ மாப்பிள்ளைக்கு மட்டுமே தங்க மோதிரம் போட்டாயாம். அவர்களது வழக்கப்படி அவருக்கும் தங்க மோதிரம் போட வேண்டுமாம். இப்போதே ஆயிரம் ரூபாய் வேண்டுமே. அதற்கு நீ எங்கே போவாய்? யாரிடம் கேட்பாய்? என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேடடார்.

பரமசிவமும், ''இப்படி திடுதிப்பென்று தங்க மோதிரம் கேட்டால் நான் பணத்திற்கு எங்கே போவேன்? கையிலிருந்த பணம் எல்லாம் செலவாகிவிட்டதே!'' என்றான்.

அப்போது அவனது அண்ணன் ''ஏன் கவலைப்படுகிறாய்? இவர் தான் உனக்குக் கடன் கொடுத்து உதவ முடியவில்லையே என்று இங்கு வந்தது முதல் புலம்பிக் கொண்டிருக்கிறாரே! இவரிடம் கடன் கேள். இப்போது இவர் உனக்கு நன்கு தெரிந்தவர் தானே. அவர் தானே விதித்துக் கொண்ட கட்டுப்பாடுதான் இனி இல்லையே. உன்னை நன்கு அறிவாரே. இவரிடம் இரண்டாயிரம் ரூபாயாகக் கடன் கேள். சந்தோஷத்துடன் உனக்குப் பணம் கொடுப்பார். அவருடைய மன வேதனையும் மறைந்துவிடும்,'' என்றார்.

மாதவனும், ''இவர் சொல்வதும் சரிதான். சிறிது நேரம் பொறுங்கள். நான் இப்போதே வந்துவிடுகிறேன்,'' என்று கூறிவிட்டு நழுவினான்.

இதைக் கண்ட பரமசிவம் மிகுந்த ஆச்சரியத்துடன், ''இவர் எங்கே போகிறார்?'' என்று தன் அண்ணனிடம் கேட்டான்.

அவரும், ''இனிமேல் அவன் நீ இருக்கும் பக்கம் தலை வைத்துக் கூடப் படுக்கமாட்டான். நீயும் அவன் புலம்பலைக் கேட்டுக் கேட்டு பொறுத்துக் கொண்டு போக வேண்டிய அவசியமில்லை. இனி அவன் உன்னைப் பார்க்க வரவும் மாட்டான். அந்தத் தங்க மோதிர விஷயம் அவனை விரட்டுவதற்காக நான் செய்த கற்பனை,'' என்றார்.

பரமசிவமும், ''அப்படியா! இது தானா விஷயம்!! அவன் வெறும் வாய்ப்பந்தல் வீரனா?'' எனக் கூறிச் சிரித்தான்.



# திருடன் தப்ப வழி இல்லை!



துளசிதாசர் ராமபக்தர். மாபெரும் கவிஞர். ராமாயணத்தை ஹிந்தியின் வட்டார மொழியான அவதியில் 'ராம்சரிதமானஸ்' என்ற பெயரில் இயற்றினார். அவர் வாரணாசியில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு தம் சீடர்களோடு இருந்து வந்தார். அவரது இனிய குரலில் ராம்சரிதமானஸை யும், அவரது அறிவுரைகளையும் கேட்க மக்கள் தினமும் அவரது ஆசிரமத்திற்கு வந்தார்கள். அவர் களில் பணக்காரர்களும் இருந்தார்கள்.

துளசிதாசரின் ஆசிரமத்திற்குள் செல்ல நான்கு திசைகளிலும் வாசல் கள் இருந்தன. அவற்றின் கதவுகள் எப்போதுமே திறந்திருக்கும். ஆசி ரமத்தில் ஒரு பொருளும் திருட்டுப் போவதும் கிடையாது. அங்கு வரும் பணக்காரர்கள் தம் பணப்பைகளை ஓரிடத்தில் வைத்துவிட்டுத் துளசி தாசரை தரிசிக்கச் செல்வார்கள். அவரது அறிவுரைகளைக் கேட்டபின் அங்கு தாம் வைத்துவிட்டுப் போன பொருட்களை எடுத்துக் கொண்டு போவார்கள்.

வாரணாசியில் திம்மன் என்ற பக்காத் திருடன் இருந்தான். அவன் பலமுறைகளில் பிடிபட்டு தண் டனை பெற்றவன். அவனது பார்வை துளசிதாசரின் ஆசிரமத்தின் மீது விழுந்தது.

அவன் அந்த ஆசிரமத்தில் பணக் காரர்கள் தம் பணத்தை வைக்கும் இடத்தைக் கண்காணிக்கலானான். என்று அங்கு நிறைய பணம் இருக்குமோ அன்று அதைத் திருடிக்



கொண்டு போய்விட வேண்டும் என்பது அவன் திட்டம். இதற்காக அவன் தினமும் ஆசிரமத்திற்குப் போய் பரம பக்தன் போல எல்லோருடனும் சேர்ந்து உட்கார்ந்து துளசிதாசரின் அறிவுரைகளைக் கேட்பது போல நடித்தான்.

ஒருநாள் திம்மன் எதிர்பார்த்த வேளை வந்தது. ஒரு பெரும் பணக்காரர் தாம் வியாபாரத்தில் அடைந்த பெருத்த லாபப் பணத்தைப் பையில் போட்டு ஆசிரமத்தில் வைத்துவிட்டு அன்றிரவு ஆசிரமத்தில் தங்கி விட்டார். திம்மன் அந்த வியாபாரி வைத்த பணத்தைத் திருடிக் கொண்டு போய்விடத் தீர்மானித்தான்.

அன்று காசியில் சிவன் கோயிலில் ஏதோ திருவிழா நடந்து கொண்டிருக்கவே, ஆசிரமவாசிகள் அனைவரும் அதைக் காணப் போய் விட்டார்கள். பணக்காரரும் சென்றிருந்தார். ஆசிரமத்தில் துளசிதாசர் மட்டுமே இருந்தார்.

திம்மன் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள எண்ணி துளசிதாசரை வணங்கி விடை பெற்றுச் செல்பவன் போல அவர் முன் நின்றான். துளசிதாசரும் அவனைப் பார்த்து, ''என்னப்பா விஷயம்? நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'' என்று கேட்டார். திம்மனும், ''சுவாமி! நான் தங்களிடம் விடைபெற்றுக் கொள்கிறேன். ஆசிரமத்தில் யாருமே இல்லை. அதைத் தெரிவிக்கவே தங்கள் முன் நின்றேன்,'' என்றான்.

துளசிதாசரும், ''ஆசிரமத்தில் யாருமே இல்லை என்று நினைக்காதே, நீ அதுபற்றிக் கவலைப் படாமல் போய் வா!'' என்றார். திம்மன் மறுபடியும் ''சுவாமி! இங்கே யாரும் இல்லை. எல்லா வாசல் கதவுகளும் திறந்தே இருக்கின்றன. எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்,'' என்றான். துளசிதாசரும், ''கவலைப்படாதே! காவல் இருக்கிறது,'' என்றார்.

திம்மன் கேலிச் சிரிப்பு சிரித்தவாறே அங்கிருந்து பணக்காரர் தம் பையை வைத்திருந்த இடத்திற்குச் சென்று அதை எடுத்தான். ஆனால் அங்கு ஒருவன் வில்லுடனும் அம்போடும் நின்று காவல் புரிவது கண்டு அவன் திகைத்துப் போனான். உடனே பையுடன் அவன் ஆசிரமத்தின்

தெற்கு வாசலை நோக்கி ஓடினான். அங்கும் ஒருவன் வில், அம்புடன் நிற்பது கண்டு பயந்து கிழக்கு வாசலுக்கு ஓடினான். அங்கும் ஒருவன் வில், அம்புடன் நிற்பது கண்டு வடக்கு வாசலுக்கு ஓடினான். அங்கும் ஒருவன் வில்லோடு நிற்பது கண்டு மேற்கு வாசலுக்கு ஓடினான். அங்கும் அதே கதை தான்.

அவன் அங்கும்இங்கும் ஓடு வதைக் கண்ட துளசிதாசர், ''ஏனப்பா இப்படி ஓடிச் சுற்றிச்சுற்றி வரு கிறாய்?'' என்று கேட்டார். மறு விநாடியே திம்மன் பேச முடியாமல் நினைவிழந்து கீழே விழுந்து விட்டான். துளசிதாசர் அவனது மயக்கத்தைப் போக்கி எழுப்பி உட்கார வைத்தார்.

அவனோ பயந்து எழுந்து நின்று ''சுவாமி! நான் கண்டது உண்மையா? தங்களது ஆசிரமத்தை வில் ஏந்திய வீரன் ஒருவன் காவல் காத்து வரு கிறானா?'' என்று கேட்டான். துளசி தாசரும் ''உனக்கு அவன் யாரென்று தெரியவில்லையா? அவன் உன் னுள்ளேயும் இருக்கிறான். எங்கும் எதிலும் எப்போதும் இருக்கும் பரம் பொருளான ஸ்ரீராமன் தான் அவன்,'' என்றார்.

திம்மன் உடனே துளசிதாசரின் காலடியில் விழுந்து, ''சுவாமி! என்னை மன்னித்துவிடுங்கள். நான் மகாபாவி, பக்காத் திருடன் திம்மன். நான் எவ்வளவோ திருட்டுகளையும் கொள்ளைகளையும் செய்து மக் களைத் துன்புறுத்தி இருக்கிறேன். அதற்காக இப்போது மிகவும் வருந்துகிறேன். என் அகக் கண்கள் திறந்துவிட்டன. இனி ஒருபோதும் அவ்வாறு செய்ய மாட்டேன்,'' என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதான்.

துளசிதாசரும், ''மகனே! நீ உன் பாவச் செயல்களை எண்ணி வருந்திக் கண்ணீர் விடுகிறாய். இனி நீ பாவியே அல்ல, ராம பக்தன். நீ அவரையே நம்பு. உன்னை அவர் கைவிட மாட்டார்,'' என்றார். திம்மனின் மனம் மாறியது. அவன் துளசிதாசரின் சீடனாகி ராமபிரானின் பரமபக்தனாக ஆகி விட்டான்.





# வயது வரம்பு இல்லை!

சுந்தரத்திற்குத் தான் சிறந்த ஓவியனாகிவிட வேண்டும் என்ற ஆசை இளம்பிராயத்திலேயே ஏற்பட்டது. ஆனால் நாற்பது வயதாகியும் அவனால் பலவித காரணங்களால் அந்தக் கலையைக் கற்க முடியாமல் போய்விட்டது. ஆனாலும் அவன் மனதிலிருந்து அந்த ஆசை அகலாமல் மீண்டும் துளிர் விட்டது.

அவன் வயதான ஓவியர் ஒருவரைக் காணச் சென்றான். அப்போது அந்த ஓவியர் இளம்வயதினர்களோடு சேர்ந்து ஓர் இளைஞனிடம் வயலின் வாசிக்கக் கற்றுக் கொண்டிருந்தார். இளைஞன் வயலினில் எந்த இடத்தில் விரலை வைத்து அழுத்தி வில்லைப் போட்டால் என்ன ஸ்வரம் வரும் என்று விளக்கிக் கொண்டிருந்தான். ஓவியரும் அதை கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அப்போது தான் சுந்தரத்திற்கு கலையைக் கற்க ஒரு குறிப்பிட்ட வயது என்பது தேவை இல்லை என்று தெரிந்தது. தான் நாற்பது வயதிலும் ஓவியக் கலையைக் கற்றுத் தேர்ச்சி பெற முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு வந்துவிட்டது.

# செய்திச் சுடர்

## ஸ்னூபிக்கு பூங்கா



தென் சீனாவில் குவாங்டாங்க் மாநிலத்தில் உள்ள ஷுண்டே என்ற நகரில் 'பீநட்' காமிக்ஸ் களில் வரும் ஸ்னூபிக்கு ஒரு பூங்காவையே அமைத்திருக்கிறார்கள். இது விரைவில் திறக்கப் படும். இதன் பரப்பளவு 550,000 ச.மீ. இந்தப் பூங்காவும் விளையாட்டுவெளியும் 12.2 மில்லியன் டாலர் செலவில் அமைக்கப் படுகின்றன. இவ்வாறு அமைக்கப்படுவது உலகிலேயே முதன்முறையிலாம்.

## ராட்சஸனுக்கு ஏற்றது!

மணிலாவின் புறநகர் பகுதியான மரிகினா பிலிப் பைனின் காலணித் தலைநகர் எனக் கருதப்படுகிறது. அதன் பெயர் மிகப் பெரிய காலணியைத் தயாரித்ததற் காக''கின்னஸ்' புத்தகத்தில் இடம்பெறப் போகிறது. தோலினால் தயாரிக்கப்பட்ட இந்தக் காலணி யின் உயரம் 5.5 மீட்டர் (சுமார் 17 அடி). துருக்கியில் இதற்குமுன் தயாரிக்கப்பட்ட மிகப் பெரிய காலணியின் உயரத்தைவிட இது 2மீ அதிக உயரமானது.





## இந்த ரோபோ நடனம் புரியும்!

ஆசிமோ எனப்படும் இந்த ரோபோ மனி தனைப் போல நடந்து நடனம் ஆடுகிறது. அதன் நிறை 52 கி, உயரம் 1.2 மீ. ஒருமுறை நடனமாடி சற்று நிறுத்தி பார்வையாளர்களின் கைதட்டல் களைப் பெற்ற பிறகே மறுபடியும் இது நடனம் புரியும். இதனை மலேசியாவின் கோலாலம் பூரில் முதலில் காட்டினார்கள்.

# மகாராஷ்டிர நாட்டுப்புறக் கதை

மகாராஷ்டிர மாநிலம் 1960ல் முந்தைய பம்பாய் மாகாணத்தின் மராட்டி பேசப்படும் பகுதியைத் தனியாக்கி உருவாக்கப்பட்டது. இங்கு மலைக் குகைகளும் காடு களும் ஆலயங்களும் நிறைய உள்ளன. 2001ல் எடுக்கப்பட்ட மக்கள்தொகைக் கணக்குப்படி இங்கு 96,752,247 பேர்கள் இருக்கிறார்கள். இதன் பரப்பளவு 307,690 ச.கி.மீ.

மகாராஷ்டிரா என்ற சொல் மாவீரர் எனப் பொருள்படும் 'மகாரதி' என்ற வார்த்தையிலிருந்து வந்தது. மகா ராஷ்டிரா என்றால் மாபெரும் நாடு என்றும் பொருள் கூறலாம். ஒரு சிலர் இதற்கு மகாகண்டாரா எனப் பெயர் கூறி பெரிய காடு எனவும் பொருள் சொல்கிறார்கள். அதாவது இது தண்டகாரண்யமாம்.

இதன் வடக்கே அரபிக்கடலும் வடமேற்கில் குஜராத்தும் வடக்கே மத்தியப் பிரதேஷும், தென்கிழக் கில் ஆந்திரப் பிரதேஷும், தெற்கே கர்நாடகமும் கோவாவும் உள்ளன. மகாராஷ்டிரத்திலுள்ள நாக்பூர் நம் நாட்டின் சரிமத்தியில் அமைந் துள்ளது என்றே கூறலாம். இதன் தலைநகர் மும்பை. இது முன்பு பம்பாய் என்றிருந்தது. மராட்டி இம் மாநிலத்தின் முக்கிய மொழி.

## கோட்டை கிடைத்தது



அந்த திங்கள்கிழமையன்று காலையில் தன் நவரத்தினங்கள் பதித்த சீப்பினால் அவள் தன் தலையை வாரிக் கொண்டிருந்தாள். அவள் கிழக்கே திரும்பியபோது ஒரு கோட்டையைக் கண்டாள். சூரிய வெளிச்சத்தில் அது பளிச்சென்று தெரிந்தது. அதைப் பார்க்கப் பார்க்க அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது.

உடனே அவள் தன் பணியாட் களில் ஒருவனைக் கூப்பிட்டு, ''நீ

இப்போதே போய் என் மகனை கையோடு அழைத்து வா! அவன் என்ன செய்து கொண்டிருந்தாலும் அதை அப்படியே விட்டுவிட்டு வரச் சொல்!'' என்றாள்.

அந்தப் பெண்மணி வேறு யாரும் இல்லை. மராட்டிய மன்னர் சிவாஜி யின் அன்னை ஜீஜா பாய் தான். அவள் தன் கோட்டையான பிரதாப்கடில் நின்று கொண்டு தொலைவிலுள்ள சிம்மகட் கோட்டையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சிம்மகட் அப் போது முகலாயர் வசம் இருந்தது. ராய்கட்டில் இருந்த தன் மகன் சிவாஜியை ஜீஜாபாய் பிரதாப்கட் டிற்கு வரவழைத்தாள்.

தன் தாயின் ஆணையைக் கேட் டதும் சிவாஜி உடனே கவசங்களை அணிந்து கொண்டும், வாள், கேடயம், புலி நகங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு தன் குதிரையான காஹ்லா கோடாவின் மீது அமர்ந்து விரைந்து சென்று பிரதாப்கடை அடைந்தார்.



அவர் தம் தாயாரைக் கண்டு, ''அம்மா! அவசரமாக வரச் சொன் னீர்களே, என்ன விஷயம்?'' என்று பணிவுடன் கேட்டார். ஜீஜாபாய் அதற்கு நேரடியாக பதில் கூறாமல், ''என்னுடன் சதுரங்கம் ஆடு. அதில் நான் வென்றுவிட்டால் நீ எனக்கு ஒரு கோட்டையைத் தர வேண்டும், தெரிந்ததா?'' என்றாள்.

அதற்கு சிவாஜி ''அம்மா! என்னைவிடப் பெரியவரான உங் களுடன் சதுரங்கம் விளையாடுவது சரியல்ல. தயவுசெய்து இதைச் செய்யச் சொல்லாதீர்கள்!'' என்று வேண்டினார்.

ஆனால் அவரது தாயாரோ அவ ரைச் சதுரங்கம் விளையாடும்படி வற்புறுத்தவே, அவரும் வேறு வழி இல்லாமல் அந்த ஆட்டம் ஆடினார். ஆட்டமும் ஆரம்பமாகியது. ஆட்டத் தில் ஜீஜாபாய் தான் வெற்றி பெற்றார்.

அப்போது சிவாஜி அவரை வணங்கி, ''என்னிடமுள்ள கோட் டைகளில் நீங்கள் எதை வேண்டு மானாலும் எடுத்துக் கொள்ளுங்கள்!'' என்றார். ஜீஜாபாயோ, ''எனக்கு இப்போது உன்னிடமுள்ள கோட் டைகளில் எதுவுமே வேண்டாம். எனக்கு வேண்டியது சிம்மகட் என் னும் கோட்டை,'' என்றாள்.

சிவாஜி அதுகேட்டு யோசனை

யில் ஆழ்ந்தார். அது மிகப் பலமான கோட்டை. அதை வெல்வது கடினம். சிவாஜி, ''அது உதய்பான் வசம் உள்ளது. அதைக் கைப்பற்றுவது மிகவும் சிரமமாயிற்றே!'' என்றார்.

ஜீஜாபாயோ, ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்கு அந்தக் கோட்டை தான் வேண்டும்,'' என்று பிடிவாதமாகக் கூறினாள். சிவாஜியும் அவரது விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறி ராய்கட்டிற்கு அவரை அழைத்துச் சென்றார்.

அங்கு அவர் சிம்மகட்டைப் பிடிக்க யாரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று யோசித்தார். அப்போது அவருக்கு தன் நீண்டகால நண்பரான தானாஜீ நினைவிற்கு வந்தார். அவர் உடனே தன் நண்பருக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார்.

அக்கடிதத்தில் இன்னும் மூன்று நாட்களுள் பன்னிரெண்டாயிரம் வீரர்களுடன் ராய்கட்டிற்கு வந்து சேருமாறு எழுதப்பட்டிருந்தது. சிவாஜியின் கடிதம் தானாஜீக்குக் கிடைத்தபோது தானாஜீ தன் மகனின் திருமணப் பந்தலில் இருந்தார். சிவாஜியின் கடிதம் கிடைத்ததும் அவர், 'சிவாஜி ஏதோ மிக அவசரமாக வரும்படி எழுதி இருக்கிறார். அதுவும் என்ன வேலை செய்து கொண்டிருந்தாலும் அதை அப்படியே விட்டுவிட்டு வரச் சொல்கிறார். அப்படி என்ன அவசரமோ? அங்கே போனால் தான் தெரியும்,'

## குகைகளும் கோட்டைகளும்


Daulatabad Fort

மகாராஷ்டிரத்தின் அழகே அதன் கோட்டைகளிலும் குகைளிலும் தான். பாறைகள் மிகுந்த இம்மாநிலத்தில் மழையில் நனைந்து வெயிலில் உலர்ந்த 350க்கும் மேலாய் கோட்டைகளைக் காணலாம். கோட்டைகள் குன்றுகளின் மீதோ அல்லது கடற்கரையோரமாகவோ கட்டப்பட்டுள்ளன. பெரும்பாலானவை சிவாஜியுடன் தொடர்பு கொண்டவை. இவை நன்கு பலப்படுத்தப்பட்ட நகரங்கள். ராய்கட், ராஜ்கட், சிந்துதுர்க், பிரதாப்கட், தௌலதாபாத், தோர்னா ஆகிய கோட்டைகள் பிரபலமானவை.

அஜந்தா, எல்லோரா குகைகளின் சிற்ப, ஓவியங்கள் பௌத்த மதப் பண்பாட்டை வெளிப்படுத்துபவை. இவற்றில் புத்தரின் சரிதமே சித்தரிக்கப்பட்டுள்ளது. இவை கி.மு. 200ல் குடையப்பட்டு கி.பி. 650ல் கவனிப்பாரற்றுக் கைவிடப்பட்டன. இங்கு பௌத்த பிக்ஷுக்கள் தனிமையில் வாழ்ந்தார்களாம்.



என எண்ணினார். உடனேயே தன் மகனின் திருமணத்தைத் தள்ளி வைத்துவிட்டுப் பன்னிரெண்டா யிரம் படைவீரர்களுடன் ராய்கட் டிற்குக் கிளம்பிவிட்டார்.

ராய்கடில் பெரும்படை வந்தது கண்டு ஜீஜாபாயே ஆச்சரியப் பட்டார். அவர் தம் மகனிடம், ''சிவாஜி! இவர்கள் முகலாயப் படைவீரர்களா?'' என்று கேட்டாள் சற்றுக் கலவரத்துடன். சிவாஜியோ, ''இல்லை அம்மா! இவர்கள் நம் தானாஜீயின் படைவீரர்கள்,'' என்றார்.

தானாஜீயைக் கண்டதும் சிவாஜி ஓடிப்போய்க் கட்டித் தழுவிக் கொண்டார். அவரோ, ''என் மகனின் திருமணத்தை நிறுத்திவிட்டு ஓடி வந்தேன். அப்படி என்ன அவசரம் வந்தது என்னை அழைக்க?'' என்று கேட்டார். சிவாஜியும், ''இதற்காக என்னை மன்னியுங்கள். இது என் தாயாரின் விருப்பம். அவர் தனக்கு ஒரு கோட்டையைக் கொடுக்கும் படிக் கேட்டார். நானும் எடுத்துக் கொள்ளும்படிக் கூறினேன். அவரோ தனக்கு சிம்மகட் தான் வேண்டும் என்றும் அதை முகலாயர்களிட மிருந்து மீட்டுத், தனக்குத் தர வேண்டும் என்று கட்டளை இட்டுவிட்டார். அந்தப் பணியை உங்களால் தான் செய்ய முடியும்,'' எனக் கூறினார். தானாஜீ வந்தது கண்டு ஜீஜாபாய் தம் குலதெய்வமான பவானியைத் துதித்தார். அவர் தானாஜீக்கு ஆரத்தி எடுத்து திருஷ்டி கழித்தார்.

தானாஜீ தன் தலைப்பாகையை எடுத்து வைத்துவிட்டு ஜீஜாபாயை வணங்கினார். ஜீஜாபாயும், ''மகனே! நீ சிவாஜியின் அண்ணன். எனக்கு சிம்மகட் வேண்டும். அதிலிருந்து முகலாயர்களை விரட்டிவிட்டு அதை எனக்குக் கொடு!'' என்றார்.

தானாஜீயும் அவர் விருப்பத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்தார். ஜீஜாபாயும் மகிழ்ந்துபோய் அவருக் குப் பரிசளித்ததோடு அவரது படை வீரர்களுக்கு நல்ல விருந்தையும் அளித்தார்.

அதன்பின் தானாஜீயின் படை அங்கிருந்து கிளம்பி ஆனந்திபாரி என்ற இடத்தை அடைந்தது. தானாஜீ ஒரு கிராம அதிகாரி போல வேடம் பூண்டு காட்டிற்குள் சென்றார். முடிவில் எதிரிகள் தங்கி இருந்த



இடத்தை அடைந்தார். அப்போது முகலாய சிப்பாய்கள் அவரைப் பிடித்துக் கொள்ளவே, அவரும், ''நான் சகாராவின் கிராம அதிகாரி. நான் காட்டிற்குள் வந்த போது ஒரு புலி என்னைத் துரத்தவே, நான் அதனிடமிருந்து தப்ப ஓடி இங்கு வந்து சேர்ந்தேன்,'' என்றார்.

அந்த வீரர்கள் அவர் கூறியதை நம்பிவிட்டார்கள். அவரும் நட்பிற்கு அடையாளமாக வெற்றிலைச் சுருளைக் கொடுத்தார். அதில் போதைப் பொருள் வைக்கப்பட்டிருந்தது.

இப்படியாக சில நாட்களுக்கு அவர்களிடையே நட்பு வளர்ந்து கொண்டேபோயிற்று. ஒரு சிலர் அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமானார்கள். அவர்களிடமிருந்து கோட்டைக்குள் செல்ல சுலபமான வழியைத் தெரிந்து கொண்டார். அவர்கள் உதய்பானு பற்றியும் அவனது படைத் தலைவன் சிடிஹிலால் பற்றிய விவரங்களை அவருக்குத் தெரிவித்தார்கள்.

அன்றிரவே, தானாஜீயின் வீரர்கள் கோட்டையில் 'கல்யாண்' வாசலை அடைந்தார்கள். அங்கு தானாஜீ சிவாஜியின் குதிரை ஒன்றை அவ்வழியே போய் உறுதியாக பாறையில் ஓரிடத்தில் நிற்கும்படிக் கூறவே அதுவும் அங்கு போய் நின்றது. அதில் கட்டப்பட்ட கயிறு கீழ்வரை தொங்கியது. தானாஜீயும் ஐம்பது படைவீரர்களும் கயிறைப் பற்றி தொற்றிக் கொண்டு கோட்டை மீது ஏறி உள்ளே சென்று காவல் வீரர்களைத் தாக்கி வீழ்த்தினார்கள்.

அங்கிருந்து ஓசைப்படுத்தாமல் அடுத்த வாசலுக்குப் போய் அங்கே இருந்த காவல்வீரர்களையும் அடித்து வீழ்த்தினார்கள். காவல்வீரர்களில் ஒருவன் தப்பித்து ஓடி உதய்பானுவிடம் விஷயத்தைக் கூறினான்.

உதயபானு முதலில் அதை நம்பவில்லை. பிறகு கோபத்துடன், ''நம் கோட்டைக்குள் மராட்டிய வீரர்களா? எந்த வழியில் வந்தார்கள்? எவ்வளவு பேர்களைக் கொன்றார்கள்? உம், சரி. அந்த வீரர்களில் ஒருவன் கூட உயிருடன் இருக்கக் கூடாது. இப்போதே அவர்களைக் கண்டதுண்டமாக வெட்டி கோட்டைக்கு வெளியே எறிந்து கழுகுகளுக்கு இரையாக்குங்கள்!'' என்று கர்ஜித்தான்.

அவன் தன் படைத் தலைவனை

## கலையும் பண்பாடும்



மகாராஷ்டிரத்தில் பல்விதக் கலைகளையும் பல பண்பாடுகளையும் காணலாம். இவை அஜந்தா குகை ஓவியங்களிலிருந்து ஆரம்பித்து ஒர்லி நாட்டுப்புறச் சித்திரங்கள் வரை நன்கு தென்படுகின்றன. மகாராஷ்டிரம் நெசவுத் தொழிலுக்குப் பெயர் போனது. பலவித வண்ணப் புடவைகள் இங்கு தயாரிக்கப்படுகின்றன. ஔரங்காபாதின் மஷ்ரூ, ஹிம்ரு புடவைகளும், ஷோலாப்பூரின் நாராயண்பேட், பைதானி புடவைகள் பிரபலமானவை.

மற்ற தொழில்களான உலோக வேலைப்பாடும், அரக்கு வேலைகளும் கோல்ஹாப்பூர் காலணி வேலைப்பாடுகளும் மிகவும் புகழ்பெற்றவை.

மராட்டியர்களை எதிர்க்க அனுப்பவே அவன் கொல்லப்பட்டான். அப்போது அவன் தன் மகன்களை அனுப்பினான். அவர்களும் கொல்லப்படவே, அவனே சென்றான். தம் தலைவனே வந்தது கண்டு முகலாயப் படை உற்சாகத்துடன் தானாஜீயைத் தாக்கியது. உதய்பானு தானாஜீயைக் கடுமையாகத் தாக்கிக் கொன்றான். தானாஜீயின் நண்பனோ உதய்பானுவைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டான்.

தானாஜீயின் மற்ற வீரர்கள் கோட்டைக்குள் நுழைந்து அதைத் தம் வசமாக்கிக் கொண்டார்கள். சிம்மகட் மராட்டியருக்குக் கிடைத்தது. அவர்களது கொடி அங்கு பறந்தது. பீரங்கிகள் முழங்கின. சிவாஜிக்கு இது பற்றிய செய்தி கிடைத்தது. அவர் தன் தாயாருக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றியதற்காக மகிழ்ந்தார்.

அவர் உடனே சிம்மகட்டிற்குச் சென்றார். ஆனால் அங்கு தன் ஆருயிர் நண்பர் தானாஜீயின் உயிரற்ற உடலைக் கண்டு மலைத்து நின்றார். பிறகு அவர், ''சிம்மகட் கிடைத்தது, ஆனால் சிம்மம் போய்விட்டதே!'' என்று கதறினார்.





# ஆசைக்கும் அளவு உண்டு!

உச்சிவேளையின்போது ஒரு யோகி ஒரு மரத்தடியில் தியானம் செய்து கொண்டிருந்தார். அப்போது ஏழையான இளைஞன் அங்கு வந் தான். அவன் ஏனோ கவலைப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் அந்த யோகியின் முன் உட்கார்ந்து அவரது தியானம் எப்போது கலையும் என்று காத்துக் கொண்டிருந்தான். வெகு நேரமான பிறகு அவரது தியானம் கலைந்தது.

அவர் கண் திறந்து பார்த்தபோது தன்முன் ஒரு இளைஞன் இருப் பதைக் கண்டு, ''மகனே! யார் நீ? உன் கவலை என்ன?'' என்று பரிவுடன் கேட்டார்.

அவனும், ''சுவாமி! என் பெயர் செல்வம். பரம ஏழை. ஒரு வேளை சோற்றிற்குப் படாதபாடு பட வேண்டி வருகிறது. என்னிடம் பணம் ஏன் இல்லை? கடவுள் ஏன் என்னை இந்த நிலையில் வைத்திருக்கிறார்?'' என்று கேட்டான். யோகியும் சிரித்த வாறே, ''செல்வம் என்ற பெயர் வைத்துக் கொண்டும் உன்னிடம் செல்வம் இல்லை என்றா கவலைப் படுகிறாய்? உனக்கு அதற்கு ஒரு வழி சொல்கிறேன். என்னுடன் வா!'' என்று கூறி ஒரு பெரிய மாளிகை யருகே அழைத்துக் கொண்டு போனார்.

அங்கே திருமணம் முடிந்து விருந்து நடந்து கொண்டிருந்தது. அந்த மாளிகை ஒரு பெரிய பணக் காரனுடையது. யோகி செல்வத்தைக் கூட்டிக் கொண்டு சமையல் செய்யப் படும் இடத்திற்குச் சென்றார். அங்கு பெரிய பெரிய பாத்திரங்களில் வித விதமான காய்கறி, கூட்டு, சாம் பார், ரசம், பாயசம் என்றெல்லாம் இருந்தன. அதைப் பார்த்த செல்வம் மலைத்துப் போனான். நாக்கில் நீர் ஊறியது. அவற்றையே அவன் ஆசை யுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

- ரேணுகா ரவி -

அதைக் கவனித்த யோகி, "செல்வா! ஏன் தயங்குகிறாய்? உனக்கு என்ன வேண்டுமானாலும் எவ்வளவு விரும்பினாலும் எடுத்துச் சாப்பிடு!" என்றார்.

செல்வமும் தான் விரும்பியதை எல்லாம் அள்ளி அள்ளி எடுத்து 'லபக்''லபக்'கென்று சாப்பிட லானான். பத்து நிமிடங்களில் அவனது வயிறு நிரம்பிவிட்டது. இனியும் எதுவும் சாப்பிட முடியாது என்ற நிலையை அடைந்த பிறகு அவன் அங்கும் இங்குமாகப் பார்க்கலானான். அப்போது யோகி "ஏன் நிறுத்தி விட்டாய்? உம், சாப்பிடு!" என்றார். செல்வமும் "சுவாமி! இது வரை சாப்பிட்டதே போதும். இனி மேல் என்னால் சாப்பிட முடியாது," என்றான்.

யோகியோ, "என்னப்பா! இங்கே சாப்பிட ஏராளமாக இருக்கிறதே. நீ வெளியே போனால் இவை கிடைக் காதே. அதனால் எல்லாவற்றையும் சாப்பிட்டு சந்தோஷமாக இரு!" என்றார். செல்வமும், "சுவாமி! ஒருவனால் ஒரு வேளைக்கு எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவு தானே சாப்பிடுவான். பத்து நாள் உணவை ஒரே வேளையில் ஒருவனால் சாப்பிட முடியாதே!" என்றான்.

யோகியும், "மிகச் சரியாகச் சொன்னாய். இதுபோலத் தான் பண விஷயமும். ஒருநாளில் ஒருவனால் எவ்வளவு சம்பாதிக்க முடியுமோ அவ்வளவு தான் சம்பாதிப்பான். ஒரு வருடத்தில் அவன் சம்பாதிப்பதை அவனால் ஒரே நாளில் சம்பாதித்து விட முடியாது. தினமும் உழைத்துச் சம்பாதித்து கொஞ்சம்கொஞ்சமாகத் தான் பணத்தைச் சேமித்து வர வேண்டும். அதிகமாக ஆசைப்பட்டால் மட்டும் பணம் கிடைத்து விடுமா? ஆசையை அடக்கி உள்ளதைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும். தெரிந்ததா?" என்றார்.

செல்வமும், "புரிந்து கொண்டேன் சுவாமி! நான் உள்ளதைக் கொண்டு திருப்தி அடைவேன். நிறையப் பணம் வேண்டும் என்று நினைக்கவே மாட்டேன்," என்று கூறி யோகியை வணங்கி நின்றான்.



# நம் இந்தியா

1. நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன் ஆங்கில அரசின் கோடை காலத் தலைநகராக இருந்தது எது?
அ) ஸ்ரீநகர் ஆ) சிம்லா
இ) டேராடூன் ஈ) டெல்ஹௌசி

2. இந்த நதியின் உபநதிகள் சலேரி, பிரான்ஹிதா, இந்திராவதி. இந்த நதியின் பெயர் என்ன?
அ) கிருஷ்ணா ஆ) கோதாவரி
இ) காவேரி ஈ) சாபர்மதி



3. இந்தப் படத்தில் உள்ளதன் சிறப்பு என்ன?



4. இந்தப் பாலம் எங்கே எந்த நதியின் மீது கட்டப் பட்டுள்ளது?

5. பஞ்சாபிற்கும் ஹரியானாவிற்கும் பொது தலைநகர் சண்டிகட். இதற்குமுன் பஞ்சாபின் தலை நகராக இருந்தது எது?
அ) ஜாலந்தர் ஆ) லூதியானா
இ) அமிருத்ஸர் ஈ) சிம்லா

6. பெங்களூர் இந்தியாவின் சிலி கோன் பள்ளத்தாக்கு என்பது போல நம் நாட்டின் எஃகு நகரம் எது?
அ) சேலம் ஆ) ரூர்கேலா
இ) ஜாம்ஷெட்பூர் ஈ) பிலாய்

## ஏப்ரல் வினாக்களின் விடைகள்

1. டாக்டர் ஹோமிபாபா.
2. தேவிகா ராணி ரோரிச்.
3. டாக்டர் எஸ்.இஜட். காசிம்.
4. இமாலய மலை ஏறும் கல்விப் பயிற்சி நிறுவனத்தில் முதல் பயிற்சி பெற்ற 21 பார்வை அற்றவர்கள்.
5. யாசிம் மெர்ச்சண்ட்.
6. டாக்டர் சலீம் அலி, ரோமுலஸ் விட்டாகர்.
7. ஏப்ரல் 1, 1957.
8. பரம் வீர் சக்ர.
9. விஜய் அமிருத்ராஜ்.



# விநாயகர்

விநாயகர் சிலையைக் கண்டு மெய்மறந்து துதிபாடி நின்ற அகத்தியர், ''வாதாபி கணபதியே! நீ தானே இப்பாறையிலிருந்து வெளி வந்தாயே! இந்த மாதிரி உருவச் சிலையை யாராலும் வடிக்க முடியாதே!'' எனக் கூறி ஆனந்த கண்ணீர் வடித்தார்.

அப்போது சிலையிலிருந்து, ''அகத்தியரே! இதை நான் எனக்காக சிருஷ்டித்துக் கொள்ளவில்லை. நீர் திருப்திப்பட வேண்டும் என்பதற்காக உமது விருப்பத்தை நிறைவேற்றினேன். எனவே இந்த மாபெரும் சிலை கொஞ்ச காலத்திற்கே இருக்கும். பின்னர் மறைந்துவிடும். துவாபர யுகத்தில் தருமர் அசுவமேத யாகம் செய்யும்போது மற்றொரு சிலை தோன்றும்,'' என விநாயகரின் குரல் ஒலித்தது. இவ்வாறு தௌம்யர் அர்ஜுன னிடம் கூறி, ''அந்தச் சிலையைத் தான் நாம் இப்போது காண்கிறோம்,'' என்றார். அர்ஜுன னும் அந்தச் சிலையை பயபக்தியுடன் வணங்கினான்.

அவன் தௌம்யரிடம், ''ஆசார்யரே! இவ்வளவு அழகான சிலைகளைப் பெற்று மிகவும் உயர்ந்து விளங்கிய வாதாபி நகரம் இப்போது ஏன் இந்த நிலையை அடைந்துள்ளது?'' என்றான். தௌம்யரும் விவரமாகக் கூறலானார்:

அகத்தியர் லோபாமுத்திரை கூறியபடி தமது செல்வத்தை எல்லாம் தானம் செய்தார். எல்லாம் கொடுத்த பின் கானக வாழ்க்கையை மேற்கொள்ள அவர் லோபாமுத்திரையுடன் தம் ஆசிரமத்திற்குப்



போய்ச் சேர்ந்தார். வாதாபி நகர மக்களும் விநாயகரையே தம் மன்னர் போலக் கருதி ஆட்சி நடத்தி சுக வாழ்வு வாழலானார்கள்.

நாட்கள் கழியலாயின. வாதாபி நகரை பற்றியும் அதன் ஆட்சி முறை பற்றியும் எங்கும் யாவரும் புகழத் தொடங்கினார்கள். அதன் புகழ் பல நாடுகளிலும் பரவியது.

அகத்தியர் தன்னைக் கொன்று விடுவாரோ எனப் பயந்து ஓடிய இல்வலன் விந்தியமலைக் காடுகளில் திரிந்தான்.

அப்போது அதனுடைய புகழைக் கேட்டு வாதாபி நகருக்குப் போகத் தீர்மானித்துக் கொண்டான். அகத்தியர் அந்நகரில் இல்லை என் பதைத் தெரிந்து கொண்டு அவன் மக்களின் பணியிலேயே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட மகான் போல உருமாறி வாதாபி நகருக்கும் போய் மக்களோடு சேர்ந்து வாழ ஆரம்பித்தான்.

வாதாபி மக்கள் முதலில் நல்ல எண்ணத்தோடு சமஉரிமை பெற்று வாழ்ந்தார்கள் என்றாலும் நாளாவட்டத்தில் அவர்களைச் சுயநலம் பற்றிக் கொண்டது. இதனால் போட்டியும் பொறாமையும் ஏற்பட்டு சண்டை, சச்சரவு, பூசல்கள் என்று ஏற்படலாயின. அறிவு படைத்தவர்கள் அறிவற்றவர்களை ஏமாற்றிப் பிழைக்கலானார்கள்.

இப்படிப்பட்ட நிலை இல்வலனுக்கு மிகவும் அனுகூலமாகியது. அவன் ஒரு தலைவனாகிவிட்டான். தன் மந்திர தந்திர இந்திரஜால வித்தைகளால் பலரது மனதைக் கவர்ந்துவிட்டான்.

அந்நகரின் நடுவே அகத்தியர் நிறுவிய விநாயக விக்கிரகம் இருக்கும் வரையில் மக்கள் அகத்தியரையும் அவரது நற்போதனைகளையும் மறக்க மாட்டார்கள் என்பது அவனுக்கு நன்கு தெரியும். எனவே தன் வித்தைகளைக் காட்டியவாறே அவன் மக்களிடையே மதுவை அருந்தும் பழக்கம் ஏற்படும்படிச் செய்தான்.

அகத்தியர் வகுத்த ஆட்சிமுறை மெதுவாக ஆட்டம் காணலாயிற்று. அகத்தியர் கூறியதெல்லாம் சரியல்ல என இல்வலன் கூறி மக்கள் ஒருவரையொருவர் எப்படி ஏமாற்றி வாழலாம் எனக் கூறலானான். யோகி போல வாழ்வது வாழ்க்கைக்கு ஏற்றது அல்ல என்றும் சகல போகங்களையும் அனுபவிப்பதே வாழ்க்கை

என்றும் அவன் கூறி மக்களின் மனதை மயக்கலானான். அவனது சீடர்களாகப் பல ராட்சஸர்களும் மனிதர்களைப் போல உருமாறி அவன் கூறியதை நகரின் பல பகுதி களிலும் கூறி வந்தார்கள்.

இப்போது இல்வலன் மாபெரும் தலைவனாகிவிட்டான். மக்கள் அவ னைக் கண்டு பயந்து அவன் கூறிய படி நடக்க வேண்டியதாயிற்று.

இல்வலன் நகரின் நடுவே உள்ள மாபெரும் விநாயக விக்கிரகத்தை இடித்துத் தள்ளித் தரைமட்டமாக்கி விட வேண்டும் எனத் துடித்தான். அதற்கான ஏற்பாடுகளையும் செய் தான். அந்தச் சிலையை அடியோடு பெயர்த்துத் தள்ள முயன்றபோது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. திடீரென நெருப்புக் கட்டிகள் அதனைச் சுற்றி நின்றவர்கள் மீது விழுந்த வண்ணம் இருந்தன. அந்தத் தீப்பிழம்பில் அம்முயற்சியில் ஈடுபட்ட அனை வரும் அழிந்தனர்.

இல்வலனுக்கோ உடலில் பல இடங்களில் தீப்புண்கள் ஏற்பட்டன. ஒரு காலையும் கையை யும் இழந்து அவன் கீழே விழுந்து துடிதுடித்த போது சிலையிலிருந்து ஒரு குரல் கூறியது. ''அடே இல்வலா! இப் படியே கையையும் காலையும் இழந்தவனாய் உன் வாழ்நாள் முழு வதும் கஷ்டப்படு, போ. இதுதான் உனக்கு ஏற்ற தண்டனை.''

அது விநாயகரின் சாபமே. ஆனால் வாதாபி நகரம் களை இழந்து போயிற்று. அங்கு ஒரு சில மக்களே



நகரை விட்டு இன்னமும் போகாமல் இருந்தனர். இப்படியாக இந்த நகரம் பாழடைந்தது.

இவ்வாறு தௌம்யர் கூறியதை கேட்ட அர்ஜுனனின் ஆச்சரியத் திற்கு எல்லையே இல்லை. அவன் அங்கு சுற்றிலும் பார்த்தான். விநாயக விக்கிரகம் தென்படவில்லை.

அப்போது தௌம்யர், ''அர் ஜுனா! ஏன் இப்படி திகைத்துப் போய் நிற்கிறாய்? இந்த மாபெரும் சிலை மாயமாய் மறைந்து போனதா என்பதைத் தானே கேட்டாய்?'' என் றார். அப்போது ஒரு முட்புதரில் இருந்து ஒரு கிழவன் வெளியே வந்தான்.

அவனுக்கு ஒரு கையும் ஒரு காலும் இருக்கவில்லை. நடக்க முடியாததால் உடலால் தரையில் ஊர்ந்தவாறே அவன் அந்த மாபெரும் சிலை இருந்த இடத்திற்கு வந்தான்.




அவன் அங்கு இரு கைகளையும் கூப்பி வணங்கிய போது அவனது உடல் கிடுகிடுவென ஆட்டம் கண்டது. மறுவிநாடி அப்படியே விழுந்து இறந்து போனான்.

இக்காட்சியைக் கண்ட அர்ஜுனன் தௌம்யரிடம், ''குருதேவரே! இவன் தானே இல்வலன்?'' எனக் கேட்டான். அவரும், ''ஆமாம். துஷ்டர்களுக்கும் போக்கிரிகளுக்கும் இந்த மாதிரி தான் முடிவு ஏற்படும்,'' என்றார். அர்ஜுனனும் உடனே சிலரை அனுப்பி தருமரை வாதாபி நகருக்கு வரும்படி தகவல் அனுப்பினான்.

தருமரும் பீமன், நகுலன், சகாதேவன் ஆகியோருடன் விரைவிலேயே வாதாபி நகருக்கு வந்து சேர்ந்தார். அன்றிரவு அவர் விநாயகர் சிலை திடீரென மறைந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டு ''என் தம்பி தங்களது மாபெரும் விக்கிரகத்தை தரிசிக்கும் பாக்கியம் பெற்றான். எனக்கு அது கிடையாதா? இப்படிப் பட்ட மாபெரும் விக்கிரகத்தை இனி யாரால் அமைக்க முடியுமா? ஆயினும் தங்களது சிலை ஒன்றைப் பிரதிஷ்டை செய்யும் பாக்கியத்தை எனக்கு அளியுங்கள்,'' என விநாயகரை வேண்டியவாறே தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

அப்போது அவரது காதில், ''தருமா! தேவ சிற்பியான விசுவகர்மாவும், மயனும் சேர்ந்து விக்கிரகத்தை உருவாக்கப் போகிறார்கள். அந்த விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டதும் உன் அசுவமேத யாகக் குதிரை இங்கிருந்து செல்லும். உன் அசுவமேத யாகமும் வெற்றிகரமாக முடியும். வாதாபி நகரை நீ மீண்டும் நன்கு அமைத்து விடு. உனது சந்திர வம்சத்து மன்னர்கள் இதை நீண்ட காலத்திற்கு ஆண்டு வருவார்கள்,'' என்ற குரல் ஒலித்தது.

தருமர் கண் திறந்து பார்த்தார். ஒரு கணம் அவர் முன் விநாயகரின் மாபெரும் விக்கிரகம் தோன்றிப் பின்னர் சட்டென மறைந்தது.

மறுநாள் காலை இருவர் அந்த வழியில் உள்ள ஒரு வெள்ளை நிறக் கல்லைப் பார்த்து ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் யார் என்பதை ஊகித்து தருமர் அவர்களை வணங்கித் தக்க மரியாதைகளையும் செய்தார். அந்த கல்லைப் பெயர்த்து எடுக்கும்போது அதனடியிலிருந்து பெரும் புதையல் கிடைத்தது. ஆம்!

அதை இல்வலன் தான் புதைத்து வைத்திருந்தான். தருமர் அந்தப் பணத்தை வாதாபி நகரப் புனர் நிர்மாணத்திற்காகச் செலவு செய்தார்.

இரு சிற்பிகளும் அழகான விநாயக விக்கிரகத்தைச் செய்து முடித்தார்கள். பிறகு முன்பு மாபெரும் விக்கிரகம் இருந்து மறைந்து போன இடத்தில் ஒரு பெரிய கோயிலைக் கட்டினார்கள். அதில் ஒரு பெரிய மண்டபமும் தயாராகியது.

விசுவகர்மாவும் மயனும் சேர்ந்து அமைத்த விக்கிரகத்தின் வாயிலாக ஒரு புதிய பாணி சிற்பக் கலையில் ஆரம்பமாகியது. தம் வேலை முடிந்ததும் அந்த இரு சிற்பிகளும் தாம் எப்படி வந்தார்களோ அப்படியே மாயமாய் மறைந்தும் போனார்கள்.

அந்த ஆலயத்தில் தருமர் அந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தார். அதன் பின்னரே அங்கே வந்து நின்ற அசுவமேத யாகக் குதிரை அங்கிருந்து வேகமாக ஓடலாயிற்று. பீமனும் அர்ஜுனனும் அதன் பின்னால் சென்றனர்.

அர்ஜுனன் அசுவமேதக் குதிரையோடு பல நாடுகளுக்குப் போய் வெற்றிக் கொடி நாட்டிவிட்டு ஹஸ்தினாபுரத்திற்கு திரும்பிச் சென்றான். அசுவமேத யாகத்தையும் அதன் பின்னர் தருமர் சிறப்பாகச் செய்தார்.

வாதாபியை ஆண்ட சந்திர வம்ச மன்னர்களுள் சத்துருஞ்ஜயன் என்பவன் நாடுகளைக் கைப்பற்றி ஆள ஆசை கொண்டவன். அவன் வாதாபி சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தான். தன் ராணுவத்தைப் பெரிதாக்கிக் கொள்ள மக்கள் மீது கடுமையான வரிகளை விதித்தான். அவனை மக்கள் மற்றொரு இல்வலன் என்றே குறிப்பிட



ஆரம்பித்தனர். அவனது புதல்வர்களில் கடைசி மகனான சளுகவர்மன் மிகவும் நல்லவன். அகத்தியரின் ஆட்சிமுறைகளே சிறந்தது எனக் கருதியவன். விநாயகரை பயபக்தியுடன் வழிபடுபவன். அதனால் மக்களின் அன்பை அவன் அடைந்தான்.

சத்துருஞ்ஜயன் நாடுகளை வெல்லத் தன் புதல்வர்களை அழைத்த போது சளுகவர்மன், ''வீணாக ஜனங்களை ஏன் கொல்ல வேண்டும்? இப்படிக் கொன்றா நாட்டைப் பெரிதாக்கிக் கொள்ள வேண்டும்?'' என ஆட்சேபித்துத் தன் தந்தையோடு போக மறுத்துவிட்டான்.

அதனால் கோபம் கொண்ட சத்துருஞ்ஜயன் ஓர் எலியைப் பிடித்து அதற்கு சளுகை எனப்பெயரிட்டு அதற்கும் சளுகவர்மனுக்கும் கல்யாணம் நடக்கப் போவதாக அறிவித்தான். இப்படியாகத் தன் மகனை அவமானப்படுத்த முயன்றான்.

சளுகன் இதனால் மனம் தளர்ந்துவிடவில்லை. தன் தந்தை செய்வது அக்கிரமமான செயல் என்பது அவனுக்குத் தெரியும். அக்கிரமம் புரிபவர்கள் முடிவில் அழிந்துதான் போவார்கள் என்பதும் அவன் நன்கு அறிந்ததே. அதனால் சத்துருஞ்ஜயனின் அடாத செயல்களைப் பற்றிக் கவலைப்படாமல் தனக்கு விநாயகர் எப்போதும் துணை இருப்பார் என உறுதியாக நம்பினான்.

சளுகையின் உண்மைப் பெயர் கல்யாண கிங்கிணி. இந்திரனின் சாபத்தால் ஓர் அப்ஸரப் பெண் அம்மாதிரி எலியாகப் பிறந்திருந்தாள். திருமணத்திற்கு வந்திருந்த எல்லோரும் மணப் பந்தலில் சளுகவர்மனைக் கேலியும் கிண்டலும் செய்வார்கள் என சத்துருஞ்ஜயன் நினைத்தான்.

அப்போது சளுகன், ''இந்த மன்னன் ஓர் எலியைத் தன் மருமகள் ஆக்கிக் கொள்ள வேண்டும் என விநாயகர் நினைத்திருக்கிறார். ஆனால் அதே விநாயகர் இதனை ஓர் அழகிய பெண்ணாக மாற்றிவிடுவார். நீங்கள் எல்லோரும் பார்த்துப் பரவசம் அடையத்தான் போகிறீர்கள் பாருங்களேன்,'' என்றான்.

*(தொடரும்)*





# செப்பு நாணய சின்னப்பன்



காட்டூரில் பெரியண்ணன் என்றும் சின்னப்பன் என்றும் இருவர் பக்கத்து வீடுகளில் வசித்து கூலி வேலை செய்து வந்தார்கள். பெரியண்ணன் பேராசைக்காரன். நிறையச் சம்பாதிக்க ஆசைப்படுபவன். சின்னப்பனோ கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடைபவன். அவர்களுக்குத் தொடர்ந்து சில நாட்களாக வேலை எதுவும் கிடைக்காததால் தலை நகருக்குப் போய் வேலை தேடலாம் என்று எண்ணித் தம் ஊரிலிருந்து கிளம்பினார்கள்.

அவர்கள் நடந்து கொஞ்ச தூரம் போனதும் ஓரிடத்தில் ஒரு சன்னியாசி மயக்கமாய்ப் படுத்திருப்பதைப் பார்த்தார்கள். அப்போது சின்னப்பன் அவரது மயக்கத்தைப் போக்கி உதவலாம் என்றான்.

பெரியண்ணனோ, ''யார் எப்படிப் போனால் நமக்கு என்ன? இதெல்லாம் வெட்டிவேலை,'' என்று கூறி முகத்தைச் சுளித்தான். சின்னப்பனோ அருகில் ஓடிக் கொண்டிருந்த கால்வாயிலிருந்து தன் இரு உள்ளங்கைகளையும் சேர்த்து அதில் நீர் எடுத்து வந்து சன்னியாசியின் முகத்தில் தெளிக்கவே அவரும் எழுந்து உட்கார்ந்தார்.

அவர் அவர்களைப் பார்த்து, ''நீங்கள் மற்றவர்களுக்கு உதவும் இயல்பு கொண்டவர்களாகத் தெரிகிறது. இதுவரை இவ்வழியே எவ்வளவோ பேர்கள் போனார்கள். ஆனால் ஒருவர் கூட என் அருகே வந்து என்னைப் பார்க்கவில்லை. நான் வேண்டுமென்றே மயக்கம் வந்தவன் போல படுத்துக் கிடந்தேன்.

- பாபநாசம் சாமா -

அதற்குக் காரணம் உள்ளது. என்னிடம் இரண்டு சிமிழ்கள் உள்ளன. அவற்றில் ஒன்று தினமும் தங்க நாணயத்தை அளிக்கும். மற்றது தினமும் ஒரு செப்பு நாணயத்தைத் தான் அளிக்கும். இவை அவரவர் செய்த உதவியின் அளவிற்கு ஏற்ப நாணயங்களை அளிக்கும். இவற்றால் நான் பயனடைய முடியாது. அதனால் நல்லவர்களைத் தேடிக் கண்டுபிடித்து இவற்றை அவர்களுக்குக் கொடுத்துவிடும்படி எனக்குக் கட்டளை இடப்பட்டுள்ளது. எனவே நீங்கள் இருவரும் யாருக்கு எது வேண்டுமோ அதை எடுத்துக் கொள்ளுங்கள்,'' என்றான்.

பெரியண்ணன் ஆசையுடன் பொற்காசுகள் தரும் சிமிழைப் பார்த்தான். சின்னப்பனோ, ''நான் அதிகமாக ஆசைப்படவில்லை. எனக்குச் செப்புக் காசுகள் கொடுக்கும் சிமிழே போதும். பெரியண்ணன் தங்கக் காசுகள் அளிக்கும் சிமிழை எடுத்துக் கொள்ளட்டும்,'' என்றான்.

பெரியண்ணன் உடனே தங்க நாணயங்கள் அளிக்கும் சிமிழை மகிழ்ச்சியுடன் எடுத்துக் கொண்டான். அதன் பிறகு சின்னப்பன் மற்ற சிமிழை எடுத்துக் கொண்டான். இருவரும் சன்னியாசியை வணங்கிவிட்டு தலைநகரை நோக்கி நடந்தார்கள்.

தலைநகரை அடைந்ததும் பெரியண்ணன் சின்னப்பனிடம், ''இனி நாம் தனித்தனியாகப் பிரிந்து செல்வோம். எனக்குத் தங்க நாணயங்கள் சேர்ந்துவிடும். அவற்றைப் பாதுகாக்க வீடு, காவல் என்றெல்லாம்





நான் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். அதனால் நீ என்னோடு இருப்பது சரிப்பட்டு வராது,'' என்றான். சின்னப்பனும், ''சரி, நீ உன் இஷ்டம் போல இரு. நான் என் வழியே போகிறேன்,'' என்று கூறி விட்டுச் சென்றான்.

மூன்று வருடங்கள் கழிந்தன. பெரியண்ணன் மாடி வீடு கட்டிக் கொண்டு ஆடம்பரமாக வாழ்ந்து வந்தான். சின்னப்பனோ உழைத்துப் பணம் சம்பாதித்து வாழலானார்கள். சிமிழ் கொடுத்து வந்த செப்பு நாணயங்களைச் சேர்த்து வந்தான். அவற்றை ஒரு பையில் போட்டு இடுப்பில் கட்டிக் கொண்டு எங்கும் சென்றான். பிறருக்கும் அவன் எப்போதும் உதவியே வந்தான். சின்னப்பன் இடுப்பில் கட்டி வைத்திருந்த பை எல்லோர் கவனத்தையும் ஈர்த்தது.

ஒருமுறை ஒரு திருடன் அந்தப் பையைத் திருடவே சின்னப்பன் அவனுக்கு அறிவுரை கூற, திருடனும் அந்த அறிவுரையை ஏற்றுத் திருந்தி வேலை செய்து பணம் சம்பாதிக்கத் தொடங்கினான்.

ஒரு திருடன் சின்னப்பனின் பையைத் தொட்டு அவனை வணங்கி திருந்திவிட்ட செய்தி காட்டுத் தீ போல எங்கும் பரவியது. அதனால் சின்னப்பனைத் தரிசித்து அவனது செப்பு நாணயப் பையைத் தொட்டு விட்டுப் போக மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள்.

இதனால் சின்னப்பனின் புகழ் எங்கும் பரவியது. இதைக் கேட்ட பெரியண்ணன் சின்னப்பன் மீது பொறாமை கொண்டான். பணக்காரனான அவன் ஏழையான சின்னப்பனைக் காணச் சென்றான்.

அவனிடம், ''மக்கள் உனக்கும் உன் செப்பு நாணயங்களுக்கும் ஏதோ அபூர்வ சக்தி உள்ளது என்று இப்போது நம்பிக் கொண்டிருக்கிறார்கள். அப்படி ஒரு சக்தி உனக்கோ அல்லது உன் செப்பு நாணங்களுக்கோ இல்லை என்று அவர்களுக்குத் தெரியும்போது நீ என்ன பாடு படுவாய் தெரியுமா?'' என்று தன் ஆத்திரத்தைக் கொட்டிக் கேட்டான்.

சின்னப்பன் எதுவும் கூறாமல் இருக்கவே, பெரியண்ணன் அவனிடம், ''நான் உன் நன்மைக்காகச் சொல்கிறேன். இப்போதே இங்



கிருந்து கண் காணாத இடத்திற்குப் போய்விடு!'' என்று கூறினான்.

சின்னப்பனும், ''நான் எதற்கும் பயப்பட மாட்டேன். என் கவலை எல்லாம் எனக்குவேலை செய்ய நேரம் இல்லை என்பதே. இந்த ஒரு காரணத்திற்காக நான் இங்கிருந்து எங்காவது போய்விடுவதே மேல் என்று நினைக்கிறேன்,'' என்றான்.

அதன் பிறகு அவன் அன்றிரவே அந்த ஊரிலிருந்து வெளியேறி விட்டான். சின்னப்பன் இருந்த நாட்டின் மன்னன் சூரியதேவன் அவனது மனைவி மாளவிகா சில ஆண்டுகளாக ஏதோ ஒரு நோயால் பாதிக்கப்பட்டு படுத்த படுக்கை யாகக் கிடந்தாள். அவளுக்கு எவ் வளவோ வைத்தியர்கள் மருந்து கொடுத்தும்கூட அவளது நோய் போகவில்லை.

அப்போது பெரியண்ணனுக்கும் சின்னப்பனுக்கும் சிமிழ்களைக் கொடுத்த சன்னியாசி அரண்மனைக் குப் போய் மன்னனைக் கண்டு, ''மன்னா! உன் மனைவியின் நோயைப் போக்க ஒரே வழி தான் உள்ளது. பிரம்மா, விஷ்ணு, சிவன், சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகி யோரின் திருஉருவங்கள் பதிக்கப் பட்ட ஆயிரம் செப்பு நாணயங்களை ஓர் அண்டா நீரில் போட்டு நன்கு ஊறியபின் அந்த நீரால் உன் மனைவி யைக் குளிப்பாட்டு. அவளது நோய் உடனே மறைந்துவிடும். அந்த நாண யங்கள் வைத்துள்ள சின்னப்பன் நாளை உன்னை வந்து காண்பான்,'' என்றார்.

அதன்பின் அவர் நகரிலிருந்து வெளியேறிக் கொண்டிருந்த சின்னப் பனைக் கண்டு அரண்மனைக்குப்

போய் அவன் வைத்துள்ள செப்பு நாணயங்களை மன்னனுக்குக் கொடுத்து அவன் மனைவியின் நோயைப் போக்கும்படிக் கூறினார்.

சின்னப்பனும் மறுநாள் அரண் மனைக்குப் போய்த் தன்னிடம் உள்ள ஆயிரம் செப்பு நாணயங்களைக் கொடுத்தான். மன்னன் அவற்றை ஓர் அண்டா நீரில் போட்டு ஊற வைத்து அந்த நீரால் தன் மனைவியைக் குளிப்பாட்டவே, அவளது நோய் மறைந்து போயிற்று. அதன்பின் சின் னப்பன் ஒரு சிறு அடுப்பை அங்கே மூட்டச் சொல்லி அந்த நெருப்பில் தனது எல்லாச் செப்பு நாணயங் களையும் அவற்றைக் கொடுக்கும் சிமிழையும் போட்டு அழித்தான்.

மன்னன் அவனிடம், ''நீ என் மனைவியின் நோயைப் போக் கினாய். உனக்கு என்ன வேண்டு மானாலும் கேள். அதை நான் கொடுக் கிறேன்,'' என்றான். சின்னப்பனும், ''அரசே! இவ்வளவு நாட்களாக மக்கள் என்னைச் செப்பு நாணய சின்னப்பன் என்றே குறிப்பிட்டு, என்னைத் தரிசிக்கவும் செப்பு நாண யங்களைத் தொட்டுக் கும்பிட்டுப் போகவும் வந்து கொண்டிருந்தார்கள். இவர்கள் இவ்வாறு செய்ததால் என்னால் வேறு எந்த வேலையையும் செய்ய முடியவில்லை. நான் வேலை செய்யவே விரும்புகிறேன். அதனால் தான் என் செப்பு நாணயங்களையும் அவற்றைக் கொடுக்கும் சிமிழையும் அழித்தேன். இனிமேல் மக்கள் என் னைப் பார்க்க வரமாட்டார்கள்,'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன், ''நீ வேலை செய்து சம்பாதிக்க விரும்பு கிறாய். பிறருக்கு உதவவும் தயாராக இருக்கிறாய். இது எனக்கு மகிழ்ச்சி யைத் தருகிறது. அதனால் உன்னைக் காட்டூர் பகுதியின் நிர்வாக அதிகாரி யாக நியமிக்கிறேன். நீ அதனை ஏற்று மக்களுக்கு உதவி புரிந்து வா!'' என்றான். சின்னப்பனும் மகிழ்ச்சி யுடன் அந்த வேலையை ஏற்று காட்டூர் பகுதி மக்களுக்கு எல்லா விதத்திலும் நன்மைகளைச் செய்து வரலானான்.





# பணமே பாசம்

பூம்புகாரில் புவனேசுவரன் என்ற கோடீஸ்வரன் இருந்தான். அவனது வீட்டில் அவனது மகன்களும் மகள் களும் பேரன்களும் பேத்திகளும் அக்கா, தங்கைகள், மாமன், மைத் துனன், மாமனார், மாமியார் என் பவர்களோடும் மற்றும் பல உற வினர்களும் இருந்து உண்டு உறங்கிக் காலம் கழித்து வந்தார்கள். அவர்கள் அவனை 'மகாராஜா' என்றும் தர்மப் பிரபு என்றும் புகழவே அவனும் அதனால் உச்சி குளிர்ந்து போய் அவர்களைத் தன் வீட்டில் இருக்க விட்டு வைத்தான்.

இதனால் புவனேசுவரனை தாராள மனம் படைத்தவன் என்று எண்ணி விட வேண்டாம். எச்சில் கையால் கூடக் காக்கையை விரட்டாத மகாக் கஞ்சன் அவன். தானம், தர்மம் என்று எதையும் செய்ததும் இல்லை. கோயிலுக்குப் போய் அர்ச்சனை செய்ததோ அல்லது அங்குள்ள உண் டியலில் காசு போட்டது என்பதோ அவன் வாழ்வில் நடந்ததே இல்லை.

ஒருநாள் ஒரு சாது அவன் வீட்டு வாசலில் நின்று 'ஐயா!' என்று குரல் கொடுத்தார். புவனேசுவரன் ஓடி வந்து வாசல் நிலைப்படியில் நின்று ''போ, போ! சாது வேஷத்தில் வரும் திருடன் நீ. மரியாதையாகப் போய் விடு!'' என்று கத்தினான். சாதுவோ, ''மகனே! நான் சொல்வதைக் கொஞ் சம் கேள்!'' என்றார்.

அவனோ, ''நீ எதுவும் சொல்ல வேண்டாம். நான் கேட்கவும் மாட் டேன்,'' என்று கூறி வாசல் கதவை மூடித் தாளிடலானான். சாதுவோ, ''நீ வெளியே வந்து நான் சொல்வதைக் கேட்கும்வரை நான் இந்த இடத்தை விட்டு நகர மாட்டேன்,'' என்று கூறி வாசல் கதவின் பக்கத்திலேயே உட்கார்ந்துவிட்டார்.

அதைக் கேட்ட புவனேசுவரன் வாசல் கதவையே திறக்கவில்லை. அன்று கொல்லைப்புறக் கதவை திறந்து அதன் வழியாகவே போய்

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியிடப்பட்ட கதை

வந்தான். அன்றைய இரவு கழிந்தது. மறுநாள் காலை அவன் கொல்லைக் கதவைத் திறந்தபோது அங்கு தன் வீட்டிற்கு முன்தினம் வந்த சாது உட்கார்ந்திருப்பதைக் கண்டு திகைத்துப் போனான்.

சாதுவோ சிரித்துக் கொண்டே, ''மகனே! நான் ஒரு முக்கியமான விஷயத்தை உன்னிடம் சொல்ல வேண்டும்,'' என்றார். புவனேசுவரனும், ''நீ என்னை விடமாட்டாய் போலிருக்கிறதே! சரி, சொல்லித் தொலை! இந்தக் காதில் கேட்டு அந்தக் காது வழியாக விட்டுவிடுகிறேன்,'' என்றான்.

சாதுவோ, ''இது அப்படிப்பட்ட அற்ப விஷயம் அல்ல. உன் வீட்டில் உனக்கு வேண்டியவர்கள் என்று யாருமே இல்லை, தெரிந்ததா?'' என்றார். அவனோ, ''இதைச் சொல்லத்தான் இவ்வளவு கஷ்டப் பட்டாயா? இங்கே எல்லோரும் என்னை மகாராஜா என்றும் தர்மப் பிரபு என்றும் புகழ்ந்து கூறுகிறார்கள். எனக்காகத் தம் உயிரையும் கூடக் கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள்,'' என்றான்.

சாதுவோ, ''அப்படி யாருமே உன் வீட்டில் இல்லை. அவர்கள் உன்னை ஒன்றும் விரும்பவில்லை. உன் பணத்தைத் தான் விரும்புகிறார்கள். வேண்டுமானால் நான் சொல்கிறபடி நீ அவர்களைப் பரீட்சித்துப் பார். அப்போது உண்மை தெரிந்துவிடும்,'' என்றார்.

புவனேசுவரனும் சற்றுப் பணிந்து



போய் ''அப்படியா சொல்கிறீர்கள், சுவாமி? நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள். அதைச் செய்கிறேன்,'' எனவே. சாதுவும் அவன் செய்ய வேண்டியதைக் கூறி விட்டுச் சென்றார்.

அதன்பின் அவன் தன் மனைவியிடம், ''எனக்குத் தலை சுற்றுகிறது,'' எனக் கூறி தடாலென்று படுக்கையில் விழுந்தான். அவனது மனைவி கவலைப்பட்டு அவனைச் சரியாகப் படுக்க வைத்தாள். சற்றுநேரத்திற்குப் பின் அவன், ''நெஞ்சு வலிக்கிறதே!'' எனவே, அவள் உடனே வைத்தியரை வரவழைத்தாள். அவரும் வந்து பார்த்துவிட்டு ''இது ஏதோ புது நோயாக இருக்கிறது. எதற்கும் ஜாக்கிரதையாக இருங்கள். தேவைப்பட்டால் எனக்கு ஆள் அனுப்புங்கள்,''

என்று கூறி ஏதோ மருந்தைக் கொடுத்துவிட்டுச் சென்றார்.

அவர் போன சற்று நேரத்திற் கெல்லாம் புவனேசுவரன் தன் உடலைக் கட்டை போல விறைக்க வைத்து மூச்சை அடக்கிக் கொண்டு இறந்தவன் போலப் படுத்துக் கிடந் தான். உடனே அவனது உறவினர்கள் எல்லோரும் அவனது உடலைச் சுற்றி இருந்து ஒப்பாரி வைக்கலானார்கள்.

அப்போது சாது ஒரு சிறு குவளை யுடன் அங்கு வந்து ''ஏன் இப்படி அழுகிறீர்கள்? யாராவது இறந்து போய்விட்டார்களா?'' என்று கேட் டார். புவனேசுவரினின் மனைவியும் ''ஆம். என் கணவர் தாம் இறந்து விட்டார். அவருக்கு எப்படியாவது உயிர் கொடுத்துப் பிழைக்க வையுங் கள்,'' என்று கெஞ்சிக் கண்ணீர் விட்டுக் கதறினாள்.

சாதுவும், ''போன உயிர் திரும்ப வராது. ஆனால் உயிர் பிழைத்து எழ ஒரு வழி இருக்கிறது. என்னிடம் ஒரு கஷாயம் உள்ளது. அதை உங்களில் யாராவது ஒருவர் குடித்தால் அவரது உயிர் இறந்தவரது உடலில் புகும். அப்போது இவர் உயிர் பிழைத்து எழுந்துவிடுவார். ஆனால் இந்தக் கஷாயத்தைக் குடித்தவர் இறந்து விடுவார். இதைக் குடிக்க யார் முன் வருகிறீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு புவனேசுவரனின் மனைவி, ''ஐயோ! கஷாயத்தைக் குடித்து நான் இறப்பதா? இது என் னால் முடியாது!'' என்று கூறினாள். மற்ற உறவினர்களில் எவருமே கஷாயத்தைக் குடிக்கத் தயாராக இல்லை.

அப்போது சாது, ''யாருமே தன் உயிரைக் கொடுக்கத் தயாராக இல்லை. இது தெரிந்ததா?'' என உரக்கச் சொல்லவே, படுத்திருந்த புவனேசுவரன் எழுந்து நின்றான்.

அந்த நிமிடமே புவனேசுவரன் தன் உறவினர்களை எல்லாம் வீட்டைவிட்டு வெளியேற்றினான். அதன்பின் சாதுவின் அறிவுரைப்படி தான தர்மங்களைச் செய்து நல்ல விதமாக வாழ்ந்து வந்தான். உலகில் பாசம் எனப் பலர் பணத்தை அடை யவே காட்டுகிறார்கள் என்பது அவன் மனதில் நன்கு பதிந்தது!




அம்புலிமாமாவின்
அன்பளிப்பு
வீர தீர பராக்கிரமன்
ஓவியம் : மகேஷ்.
தாந்திரீகன் நாகபந்துவின் தூண்டுதலால் ஆதித்தனைப் பிடித்து வருவதாக சேனாதிபதி நரேந்திரதேவன் கூறினான். அவன் அம்முயற்சியில் ஆற்றில் படகில் சென்றபோது படகு கவிழ்ந்தது. ஆற்றில் அவனை முதலைகள் கடித்துக் குதறவே, ஒரு கையையும் இரு கால்களையும் இழந்தான். ஆதித்தன் தன் வீரர்களோடு நாகபந்துவின் ஆலயத்தைச் சூழ்ந்து அங்கு காவல் புரிந்தவர்களை சிறைப்படுத்தினான். சந்தடி கேட்டு விழித்த நாகபந்து தன் ஆட்களை அழைத்தபோது யாருமே வரவில்லை.


ஆதித்தன் குகைக் கோயிலுள் சென்ற போது ரவீந்திரதேவனும் மந்திரவாதியும் வரவே அவர்களைக் காண நாகபந்து கோயிலிலிருந்து வெளியே வந்தான்.
என்ன ஆச்சரியம்! சுற்றிலும் யாருமே இல்லையே!!
ஒருவேளை எல்லோரும் ஆதித்தனைப் பிடிக்கப் போயிருப்பார்கள்.


நாகபந்து இப்போது என்னைப் பார்த்து விடக் கூடாது!
ஆதித்தன் நாகபந்துவை எதிர்க்க திட்டம் தீட்டினான்.
ரவீந்திரதேவனை மட்டும் சிறைப் படுத்துங்கள். நாகபந்து பற்றி பிறகு பார்ப்போம்.
அப்படியே செய்கிறோம்!


மைதானத்தில் அக்கினிகுண்டம் இருந்த இடம் நோக்கி ஏதோ ஒரு ஒளி வருவது கண்டு நாகபந்து ஆச்சரியப்பட்டான்.
என்ன விந்தை! எவ்வளவு பிரகாசமான ஒளி! இது நல்ல சகுனம் தானே?
ரவீந்திரதேவனை ஆதித்தனின் கட்டளைப்படி மலைச்சாதியினர் சிறைப்படுத்தினார்கள்.
என்னை அக்கினி குண்டத்தருகே கொண்டு செல்லுங்கள்!

நாகபந்து மறுபடியும் தன் சீடர்களைக் கூப்பிட்டான்.

எல்லோரும் ஒரேயடியாக எங்கே போய் விட்டீர்கள்?

என்ன? படைவீரர்களா? இங்கே ஏன் வந்தார்கள்?

ஆதித்தனின் வீரர்கள் தம்மைச் சூழ்ந்துவிட்டது கண்டு ரவீந்திர தேவனும் மந்திரவாதியும் பயந்து போனார்கள்.

நான் யாரென்பது தெரியுமா? இங்கிருந்து சென்று விடுங்கள்.

யார் நீங்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?

நீங்கள் எங்களுடன் வர வேண்டும்.


நாகபந்துவும் ஆதித்தனும் முதல்முறையாக ஒருவரை மற்றவர் நேர்எதிரே நின்று பார்த்தார்கள்.
ஆதித்தன் நீதானா?
ஆம். நீங்கள் தேடும் ஆதித்தன் நான் தான்!
முடிவில் அகப்பட்டு விட்டாய்!


நாகபந்து சற்றும் வியப்படையாதவன் போலவும் ஆதித்தனின் வருகையை எதிர்பார்த்தவன் போலவும் நடித்தான்.
இது ஆரம்பமே, எச்சரிக்கிறேன். உன்னைக் காத்துக் கொள்!
நானும் இந்த நாளுக்காகத் தான் காத்து இருந்தேன்.
இனி என்ன ஆகும்?


திடீரெனத் தன் தோற்றத்தை மாற்றிக் கொண்டான் நாகபந்து. நெருப்பைக் கக்கும் மூன்று தலைப் பாம்பாகிவிட்டான்.
ஆதித்தா!!!
ஆதித்தா!
ஆதித்தா!!
உன் முடிவு நெருங்கி விட்டது, ஆதித்தா!

ஆதித்தனின் தலைப்பாகையில் இருந்த இறகு பெரிய கருட பட்சியாக ஆகிவிட்டது.

மெய்க்காவலர்களும் மலைவாசிகளும் மலைத்துப் போயினர். கருடன் மூன்று தலைப் பாம்பின் மீது பாய்ந்தது.

சிறிது நேரம் இரண்டும் சண்டை போட்டன. கருடன் பாம்பின் தலைகளைக் குதறி, தன் கால் நகங்களால் அதைப் பற்றித் தூக்கிக் கொண்டு இறக்கைகளை விரித்து...

அப்படியே அலாக்காகத் தூக்கிய பாம்புடன் வானத்தில் வட்டமிட்டுவிட்டு முடிவில் அதை அக்கினி குண்டத்தில் போட்டது.

தொடரும்




## மேலே செல்ல!

மோனிஷ் குரங்கார் யானை மீது அமர்ந்திருக்கிறார். மித்ரா குரங்காரும் அதன்மேல் உட்கார விரும்புகிறார். இந்த சிக்கலான வழியில் செல்ல நீங்கள் அதற்கு உதவுங்கள்

## கண்டுபிடியுங்கள்

இதில் ஏதோ ஒரு தவறு உள்ளது.
அதைக் கண்டுபிடித்துக் கூறுங்கள், பார்ப்பேப

# வெளிக் கொணர்க!

இந்த மரத்தில் காட்டிலுள்ள எல்லா உயிரினங்களும் ஒளிந்து கொண்டிருக்கின்றன. அவற்றை எல்லாம் நீங்கள் கண்டுபிடியுங்கள்.

# தனிப்பிறவி

அணில் அண்ணனும் அதன் சகோதரர்களும் ஒன்று மற்றவை போல இருந்தாலும் மாறுபாடு கொண்டது ஒன்றே. அதைக் கண்டுபிடியுங்கள்.

# உல்லாச வேளை

சேவலார் கிதார் வாசித்துக் கொண்டிருக்கிறார் இப்படத்தில். ஓவியர் இதற்கு வண்ணம் தீட்டவில்லை. நீங்கள் நல்ல வண்ணம் கொடுங்கள்.

(விடைகள் 66ம் பக்கத்தில்)







# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு ஜூலை 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

மார்ச் 2003 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

பொன். கந்தசாமி
519 H, ரயில்வே குடியிருப்பு,
கிராப்பட்டி, திருச்சி – 620 012.

பரிசு பெற்றவை





சுழற்றியே தொடங்கும் வாழ்வு !
சுற்றியே தொடரும் வாழ்வு !!

## கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)

வெளிக் கொணர்க - 14 உயிரினங்கள் மரத்தில் உள்ளன. எலி, வண்ணத்துப் பூச்சி, பல்லி, அணில், மான், கழுகு, பூனை, நரி, மீன், வாத்து, முயல், வௌவால், ஆமை

தனிப்பிறவி - B

கண்டுபிடியுங்கள் - பாம்பிற்கு இரு தலைகள் உள்ளன, வால் இல்லை.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

**AMBULIMAMA** (Tamil) **MAY 2003**
Regd. with Registrar of Newspaper for India No. 1095/57
Registered No. TN/PMG(CCR)-592/03-05
Licensed to post without prepayment No. 377/03-05
Foreign - WPP. No. 378/03-05